உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 10 } குரோதனஹு சித்திரைமீ கவ { பகுதி 10
1925ஹு ஏப்ரல்மீ 13உ

## கடவுள் வணக்கம்.

ஐவகையெ னும்பூத மாதியை வகுத்ததனு
ளசரசர பேத மான
யாவையும் வகுத்துநல் லறிவையும் வகுத்துமறை
யாதி நூலையும் வகுத்துச்
சைவமுத லாமளவில் சமயமும் வகுத்துமேற்
சமயங் கடந்த மோன
சமரசம் வகுத்தநீ யுன்னைநா னணுகவுந்
தண்ணருள் வகுக்க விலையோ
பொய்வளரு நெஞ்சினர்கள் காணாத காட்சியே
பொய்யிலா மெய்ய ரறிவிற்
போதபரி பூரண வகண்டிதா காரமாய்ப்
போக்குவர வற்ற பொருளே
தெய்வமறை முடிவான பிரணவ சொரூபியே
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே. (1)

கையு மெய்யுங் கருத்துக் கிசையவே
ஐய தந்ததற் கைய மினியுண்டோ
பொய்ய னேன்சிந்தைப் பொய்கெடப் பூரண
மெய்ய தாமின்ப மென்று விளைவதே. (2)

வைத்த தேகம் வருந்த வருந்திடும்
பித்த னைருள் பெற்றுந் திடமிலேன்
சித்த மோன சிவசின்ம யானந்தம்
வைத்த வைய வருட்செம்பொற் சோதியே. (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. இப்பாடலில், சர்வகாரண மூர்த்தியாய்ப் பலவகை அரிய காரியங்களை யெல்லாம் உண்டுபண்ணிய பரமாத்மாவை நோக்கி "தேவரீருடன் இரண்டறக் கலப்பதற்கு ஏதுவாகிய திருவருள் அடியேனிடம் சுலபமாகப் பதிதற்குரிய கருணையை ஏன் செய்யவில்லை" என்று ஆசிரியர் விண்ணப்பித்துக் கொள்ளுகிறார்.

ஐவகைப் பூதம்=நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் ஐந்து விதமான பூதங்கள். இவற்றின் மயமாய் நிற்பதே பிரபஞ்சம் ஆதலின் "ஐவகையெனும் பூதமாதி" என்றார்.

வகுத்தல்=படைத்தல்.

இப்பிரபஞ்சம், மாயை அல்லது மூலப் பிரகிருதியை முதற்காரணமாகவும், சத்தியைத் துணைக்காரணமாகவுங் கொண்டு, நிமித்தகாரணனான ஈஸ்வரனால் காரியப்படுவதனை,

"காரிய கார ணங்கள் முதல்துணை நிமித்தங் கண்டாம்
பாரில்மண் திரிகை பண்ணு மவன்முதல் துணை நிமித்தம்
தேரின்மண் மாயை யாகத் திரிகைதன் சத்தி யாக
ஆரியன் குலால னாய்நின் றாக்குவன் அகில மெல்லாம்"

என்னும் சிவஞான சித்தியாரால் நன்குணரலாம். அதாவது முதற்காரணமாகிய மண்ணானது துணைக்காரணமான தண்டு சக்கரங்களைக் கொண்டு நிமித்தகாரணனென்னுங் குயவனால் எப்படிக் காரியப்படுகின்றதோ அப்படி என்க.

இந்தப் பிரபஞ்சம், சரம் அசரம் என்னும் இருவகைப் பேதங்களையுடையது.

சரம்=நடைபெறுவது ; அசரம்=நடைபெறாதது.

"நல்லறிவையும் வகுத்து" என்பது இறைவன் சேதனு சேதனமான பிரபஞ்சத்தை ஆட்டவும் அறிவூட்டவும் வல்லன் என்பதை வெளிப்படுத்துகின்றது. அறிவூட்டுதல் வேதாதிகலைகளை யளித்து ஆட்கொள்ளுதல்.

"வேதமே முதலா யுள்ள வியன்கலை யனைத்துந் தொல்நாள்
ஓதினன் அவனே எங்கட் குரைத்திட வுணர்ந்தா மன்றே"

என்று கந்தபுராணங் கூறுகின்றது.

அசேதனங்களையும் ஆட்டக்கூடியவன் பரமேசன் என்பதை,

"கல்லினாற் சமைத்த கைம்மா கரும்புணக் கருணித் தேவாய்ச்
சொல்லினாற் செய்த முக்கட் சுந்தரர்"—என வருந் திருவிளையாடற் புராணச் செய்யுளடிகளினால் உணரலாகும்.

சைவ முதலாகிய கணக்கற்ற சமயங்களை முதல்வனருளியது ஆன்

மாக்களின் கன்மபேதங்களை யனுசரித்த பக்குவா பக்குவங்களைத் தழுவி என்க.

சமயங் கடந்த மோன சமரசம்=சமயாதீதமான மோனமாகிய சமரசநிலை.

மோனம்=மௌனம்.

சமரசம்=பேதமின்மை.

அணுகவும்=அடையவும், சேரவும்.

தண்ணருள்=குளிர்ந்த தன்மையான கிருபை; இதுவே அறக்கருணை; மறக்கருணைக்கு எதிரானது.

மேற்சொன்ன அரிய செயல்களை யெல்லாம் உண்டுபண்ணிய தேவரீர் அடியேன் உம்மை எளிதில் அடையும்படியான கிருபையை மாத்திரம் உண்டுபண்ணவில்லைபோலும் என்று கேட்கின்றார். இங்கு,

"ஆழாழி கரையின்றி நிற்கவிலையோ.........
பாழான என்மனங் குவிய வொருதந்திரம் பண்ணுவ
துனக்கருமையோ...........

என்று இவரே கூறியுள்ள பாடல் கவனிக்கத்தக்கதாம்.

பொய்வளரும் நெஞ்சினர்கள்=இறைவனை நேசியாதவர்கள்.

பொய்யிலா மெய்யர்=அன்பர்கள். பொய்யரிடத்தில் இறைவன் இருக்கும் இருப்பு முள்மேலிருப்பாம். மெய்யரிடம் அவர்களுடைய 'அறிவில் போதபரிபூரண அகண்டிதாகாரமாய்ப் போக்குவரவற்ற பொருள்' ஆய் எழுந்தருளியிருக்கும் இருப்பாம்.

இதனை, "மெய்யானைத் தன்பக்கல் விரும்பு வார்க்கு
விரும்பாத அரும்பாவி யவர்கட் கென்றும்
பொய்யானைப் புறங்காட்டி லாட லானைப்
பொன்பொலிந்த சடையானைப் பொடிகொள் பூதிப்
பையானைப் பையரவம் அசைத்தான் றன்னைப்
பரந்தானைப் பவளமால் வரைபோல் மேனிச்
செய்யானைத் திருநாகேச் சுரத்து ளானைச்
சேராதார் நன்னெறிகட் சேரா தாரே"

என்னுந் தேவாரம் அறிவிக்கின்றது.

போதம்=ஞானம்.

அகண்டிதாகாரம் = கால தேச வஸ்துவினால் வேறுபடுத்தவொண்ணாத சொரூபம்.

போக்கு வரவற்றது=பிரிவில்லாதது.

பிரணவ சொரூபி=ஓங்கார வடிவமானது.

ஓங்காரம் அ, உ, மகரங்களென்னும் மூன்றெழுத்தாலாகிய ஓரெழுத்தொருமொழி. அதாவது:—

"அகார காரணத்துளே யனேகனேக ரூபமாய்
உகார காரணத்துளே உருத்தரித்து நின்றனன்
மகார காரணத்துளே மயங்கி நின்ற வையகம்
சிகார காரணத்துளே தெளிந்ததே சிவாயமே"

என்பதாம். —(சிவவாக்கியர்.)

சித்தாந்தம்=முடிந்த முடிவு.

சிரகிரி=திரிசிராப்பள்ளி. பூர்வம் திரிசிரன் ஆண்ட இடம். இவனுக்கு கரன், தூஷணன் துணைவர். முடிவில் திரிசிரன் பெயராலேயே திரிசிராப்பள்ளி என நின்றது.—(செவ்வந்திப்புராணம்.)

தக்ஷிணாமூர்த்தி=இறைவன் தென்முகமாக எழுந்தருளிய கோலம். சனகாதியோகியர்க்கருளிய காட்சி.

சின்மயானந்தம்=ஞான ஆனந்தம்.

2. கையினு லஞ்சலி செய்யவும், காயத்தால் வணங்கவும், மனதால் தியானிக்கவும் இருந்துவர அடியேனை வைத்தருளியதற்கு ஐயப்பாடும் உண்டோ? என்கிறார்.

மெய்யதாம்=உண்மையாகிய.

3. வைத்த=அமைத்தருளிய.

சித்த=மெய்யான.

உடலைத் தானென உயிரானது வித்தியாசப்படுத்தாமல் இருத்தலின் அந்த உடல் வருந்த அபிமானத்தால் உயிரும் வருந்துகின்றது. இதனை ஆராயின் உயிர்க்கு முடிவாய் ஆகவேண்டியதை நிறைவேற்றவே உடலானது கடவுளாலளிக்கப்பட்டதென்பது வெளியாம். அவ்வுடலைக்கொண்டு ஆகவேண்டியதைத் தேடிக்கொண்டதும் உடலின் பிரிவுக்கு மேலோர் வருந்தமாட்டார்கள். கரும்பிலுள்ள ரசத்தைக் கிரகித்தபின் சக்கையைக் குறித்து வருந்துவோரார்? அதுபோலென்க.

---

# ஆனந்தபோதினி

குரோதனஸு சித்திரைமீ கஉ

## கைத்தொழிலின் கௌரவம்.

கைத்தொழிலின் கௌரவம் கணக்கிட முடியாது. அது தெரிந்த ஒருவன் தன்னைச் சுதந்தரமாகக் காத்துக்கொள்ளும்

வழி தெரிந்தவனுவான். அனுவசியமாகப் பிறர் தயவை எதிர் பாரான். அதுபோலொருவனுக்குச் சுதந்தர மளிக்கவல்லது வேறெது? தேசமுன்னேற்றத்திற்கும் அதுவே முதன்மையாகு மென்றால் அதன் பெருமையை நாம் அளவுபடுத்தக் கூடுமோ? நமது பாரத நாடு, "புகழுடன் தோன்றியதொன்று; லௌகிக வைதிக விஷயங்களில் மக்களை உயர்த்தக்கூடிய ஐசுவரியங்கள் இயல்பாகவே அமையப்பெற்றது; பிற நாடுகளையும் தாங்கவல் லது; அதுவே புண்ணிய பூமி" என்றிவைபோன்ற வசனங்க ளால் அன்னியராலுங் கொண்டாடப்பெற்று வருவதற்கு அடிப் படை, நம்முன்னோர்கள் கையாண்டுவந்த கைத்தொழிலே யல் லவா? அவர்கள் சுதந்தர ஜீவியத்தை விரும்பியபடியால் கைத் தொழிலைப் பெரிதும் ஆதரித்து வந்தார்கள்.

கைத்தொழிலை மனதார விரும்பிக் கற்றால், அது கற்றவ னுக்கு உற்சாகத்தையும், தேகாரோக்கியத்தையும், நல்லொழுக் கத்தையும், தன்னைப்போல் பிறரையெண்ணிச் சமயா சமயங்க ளில் உதவிபுரியுந் தீரத்துவத்தையும், தெய்வ விசுவாசத்தையும், மற்றுமிவைபோன்ற உயர்தரக் குணங்களையும் கொடுத்து, இவற் றின் அபிவிர்த்தியிலேயே அவன் மனது மேலுமேலும் நாடத் தக்க ஊக்கத்தில் அவனை நிலைபெறச் செய்யும் என்பதில் ஐயப் பாடுமுண்டோ? இல்லை, இல்லை, முக்காலுமில்லை. இதற்கு நம் முன்னோர்களே சாக்ஷி.

நமது முன்னோர்கள் ஒருமித்து அன்பு, ஒற்றுமை, ஒத்தா சை, பொதுநலவுழைப்பு முதலிய நற்குணங்களைக் கையாண்டு வந்தபோதிலும், உலகம் செவ்வனே நடைபெறவேண்டிய தொ ழில் முறைமையை உத்தேசித்து, தம்மை நாற்பெரும் பிரிவின ராய் வகுத்துக்கொண்டு ஓதல், ஓதுவித்தல், வேட்டல் (ஓமஞ் செய்தல்), வேட்பித்தல் (ஓமஞ் செய்வித்தல்), ஈதல், ஏற்றல், உல கோம்பல், படை பயிற்றல், போர் புரிதல், பொருளீட்டல், பசுக் காத்தல், ஏருழல், குயிலுவத்தொழில் செய்தல் (அதாவது தோற் கருவிகளைக் கொட்டல், துளைக்கருவிகளை யூதல்), காருகவினைக ளாக்கல் (அதாவது பட்டு நூலையும் பருத்தி நூலையுங் கொண்டு ஆடையாக்கல்) முதலிய தொழில்களைச் செய்துவந்தனர். நாமும் அவர்களைப் பெரும்பான்மையும பின்பற்றியே நிற்கிறோம்.

"கைத்தொழில் தெரிந்தவன் பிழைக்க வழி தெரிந்தவ

ஞவான் என்பது உண்மையே. ஆயினும் சிற்சில சமயங்களில் அதுவும் பயனளிக்காமற் போகிறதில்லையா? உழவுத் தொழிலில் பத்து ஏர் வைத்துக்கொண்டு பயிரிட்டுவந்த ஒருவன், ஒருகாலத்தில் நஷ்டமடைந்து, சர்க்காருக்கு கிஸ்திகட்ட வழியின்றி ஒற்றைக் கோவணத்துடன் ஊரைவிட்டு ஓடிப்போனதாகவும், வழியில் எதிர்ப்பட்ட ஒரு சர்க்கார் மனுஷனுக்குப் பயந்து, அருகிலிருந்த ஒரு சமணக் கோயிலுக்குட் புகுந்து பதுங்கிக்கொண்டதாகவும், அப்போது அங்கே யிருந்த சமண விக்கிரகத்தை அவன் உற்றுப் பார்த்து, அது நிர்வாணமா யிருப்பதற்கு மனந் தாளாதவனுய் அதை யுடனே கட்டிக்கொண்டு "என் அப்பனே! நானோ பத்து ஏர் வைத்து உழுது ஒற்றைக் கோவணத்துடன் வெளிப்பட்டேன்; நீ எத்தனை ஏர் வைத்து உழுது அந்தக் கோவணமும் இல்லாமல் இக்கதியானுய்" என்று அழுததாகவும் சொல்லுகிறார்களே" என்று சிலர் கேட்கலாம். அது ஏகதேசம். "ஆனைக்கும் அடி சறுக்கும்" அல்லவா? உழவு செய்பவர்,

"ஏரும் இரண்டுளவாய் இல்லத்தே வித்துளதாய்
நீரருகே சேர்ந்த நிலமுளதாய்—ஊரருகே
சென்று வரஎளிதாய்ச் செய்வாரும் சொல்கேட்பின்
என்றும் உழவே யினிது"

என்று கூறுவது வழக்கம். ஆயினும் அதற்கு மிஞ்சிய சுதந்தரத் தொழில் எதுவுங் கிடையாது. பயிரிடுபவரெல்லாம் பயன் பெறாமலா போகிறார்கள். "மேழிச் செல்வம் கோழை படாது" அதாவது கலப்பையைப் பிடித்து உழுது பயிர் செய்தலால் உண்டாகிற செல்வம் ஒருபோதும் குறைவையடையாது என்றும் "சீரை (சௌக்கியத்தை)த் தேடின் ஏரைத்தேடு" என்றும் இன்னும் பலவாகவுமன்றோ இதன் சிறப்பைப்பற்றிப் பெரியோர்கள் கூறியிருக்கின்றனர்.

"தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்"

என்கிறபடி எத்தொழிலினும் பாடுபட்டால் சுகம் உண்டு. நிற்க,

கைத்தொழில் வல்லவன் மேற்சொன்ன சுகுணங்களை யெல்லாம் பெற்றுச் சுகஜீவியாய்த் தீர்க்காயுளுடன் வாழக்கூடுமானாலும் அத்துடன் என்றும் நிலைக்கத்தக்க பெரும் புகழ் தந்து அவனை வாழ்விக்கக்கூடியது மற்றொன்றிருக்கிறது. அதுவும் அவ

னைச் சேருமானால் பொன்னாற் செய்த மலரானது மணத்தையும் பெற்றுவிட்டால் எத்தகைய பிரக்யாதி அடையக்கூடுமோ அத் தகைய பிரக்யாதியை அவன் அடையக்கூடும். ஆதலால் அவன் அதையுங் கற்கப் பிரயாசைப்படவேண்டும். அது எது? கல்வியே யன்றிப் பிறிதொன்றன்று.

கைத்தொழிலென்பது, தக்கவயதடைந்த ஒருவன் தன்னை யும் தன்னைச் சார்ந்தோரையும் ஆதரிக்கப் போதுமான வருமா னத்தைச் சம்பாதிப்பதற்குத் தேடிக்கொள்ளும் ஆதாரமாம். உலகத்தில் மண், கல், மரம், இரும்பு, ஈயம், பித்தளை, துத்தநா கம், அலுமினியம், வெள்ளி, பொன் முதலிய அனேக பொருள்க ளிருக்கின்றன. இவற்றி லேதாவதொன்றையோ பலவற்றையோ கொண்டு, கல்வியறிவையும் உபயோகித்து நாட்டுக்குப் பயன் படத்தக்கவும், நாட்டார் அதிசயிக்கத்தக்கவுமான சாமான்களாக உருவாக்கினால் அவை நல்ல லாபத்தையுங்கீர்த்தியுங் கொடுக்கும். இவையேயன்றி விளைபொருள்களை விளைவித்துப் பக்குவப்படுத்தி னால் அவைகளும் நல்ல லாபத்தைக் கொடுக்கும். கால்நடைக ளைப் பரிபாலித்து வருவதாலும் விசேஷ பயனிருக்கின்றது. இவைபோன்ற சுதந்தரத் தொழில்கள் எவ்வளவோ வுண்டு.

தொழில் சம்பந்தமான கலாசாலைகளும் நமது நாட்டில் ஆங் காங்கே பரவத் தொடங்குகின்றன. நம்முடைய மக்களை அக் கலாசாலைகளுக்கு அனுப்பி, சில பல தொழில்களிற் தேர்ச்சி யடையவைத்தால் அப்பிள்ளைகளால் நமது நாட்டுக்கு அனுகூல முண்டாகும். சேவகத் தொழிலொன்றையே பெரிதாக எண்ணி அதற்குரிய வித்தையை மாத்திரம் பிள்ளைகளுக்குக் கற்பிப்பது அவ்வளவு இலாபகரமானதாகத் தோற்றவில்லை.

கைத்தொழிலால் வருங் கௌரவமே சிறந்ததாதலால் நம்ம வர் இதைப் பெரிதுங் கவனித்துப் பிள்ளைகளை இவ்வழியிற் பழக வைப்பார்களாக. எல்லாம்வல்ல இறைவன் இது விஷயத்தில் அருள்புரிவானாக. ஓம் தத்ஸத்.

---

## தமிழரும் தமிழும்.

தமிழ் என்னும் மொழிக்குரியோர் தமிழர் எனப்படுவர். தமிழ் மிக வலித்தலும் மிக மெலித்தலுமில்லாத இடைத்தரமான இன்பந் தரத்தக்க ஓசை யுடையதாய் நம்மவரது பேச்சு வழக்கில் உளதாய நம்மவர்க்குரிய மொழி. அம்மொழி வழங்கும் நிலப்பரப்பெல்லாம் தமிழகம் எனப்

பமும். அத்தமிழகம் எக்காலத்தும் ஒருபடித்தாயிருந்ததில்லை. ஆராய்ச்சிக்கு முற்பட்ட பண்டைக்காலத்தில், இத்தமிழகம் தென்கடலிலே நெடுந்தூரம் பரவியிருந்தது. முதலூழிக்காலத்து அந்நிலத்துப் பெரும் பரப்புத் தென்பகுதி கடலுள் மூழ்கியது. அதில் அழிந்த மக்கள் போக, ஒழிந்த மக்கள் குடியிருப்புக் கிடந்தேடிக் குமரிக்கு வடபாலுள்ள நாட்டில் குடியேறினர். இரண்டாம் ஊழியிலும் தமிழகம் கடற்கோட்பட்டது. அக்காலத்து, குமரியளவுமிருந்த தென்னாட்டுப்பகுதி கடலுட்பட்டது. அங்கு நின்று எஞ்சிய தமிழர் குமரிக்கு வடபால் குடியேறி யிருந்த பண்டை முதலூழித் தமிழர் நாட்டிற்கு வடக்குப் பகுதியிலே பாலாறு அளவும் குடியேறினர். அவருள்ளும் சிலர் இவ்விரு கூட்டத்தாரையும் சாராது, மேற்றிசை மலைநாடுகளிலே குடியேறித் தங்கிப் பரவினர். ஆகவே, தமிழரது குடி மூன்று வகைப்பட்டது. குமரிமுதல் வெள்ளாறு அளவும் வதிந்தோர் பண்டைக் குடியினர் பாண்டியராயினர்; வெள்ளாறு முதல் பாலாறு அளவும் சூழ்ந்து வதிந்த குடியினர் சோழராயினர்; மேன்மலைநாட்டு சேரரது பரவின குடியினர் சேரராயினர். எனவே, தமிழ் நிலமக்கள் சரித்திரகாலத்தில் பாண்டியர், சோழர், சேரர் என மூக்குடியினரா யிருந்தனர். இம் மூக்குடி மக்களுள் தலைமைக் குடியினராய் அரசுசெய்திருந்த குடும்பங்களுக்குப் பாண்டியர், சோழர், சேரர், எனப் பட்டப்பெயர் வழங்கின.

இம்முக்குடியினரும் வாழ்ந்த நிலப் பகுதிகள் பாண்டிநாடு, சோழநாடு, சேரநாடு எனவும், இன்னும் பிற்காலத்து, பாண்டிய மண்டலம், சோழமண்டலம், சேரமண்டலம் எனவும் வழங்கின. பின்னர், வடநாட்டுப் பல பகுதிகளிலே, கிளைத்துக் கூட்டங்கூட்டமாகத் தொகைசேர்ந்து தென்னாட்டில் புகுந்த பல்லவர் என்னும் ஒரு கூட்டத்தார் தங்களைத் தொண்டர் எனவும், தொண்டையர் எனவும் கூறிக்கொண்டு தாம் வதிந்த நாட்டுக்குத் தொண்டைமண்டலம் எனப் பெயரிட்டுக்கொண்டனர். அவர்களும் வீட்டில் வழங்கும் மொழி தமிழேயாய், தமிழ் மக்களோடு உறவாடிக் கலந்துகொண்டதால் தமிழர்களோடு ஒருங்கெண்ணப்படுவர். ஆதலின், தமிழ் நிலம் பிற்காலத்தில் நான்கு மண்டலங்களாகப் பகுக்கப்படுவதும் உண்டு.

இலக்கண வமைதிக்குட்பட்ட சரித்திர ஆராய்ச்சிக்கடங்கிய பண்டைக்காலத்துத் தமிழ்நிலம் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், என நிலம், காலம், மக்கள், ஒழுக்கம் இவற்றிற் கேற்றவகையால் பகுக்கப்பெற்று நானிலமெனவும், வெப்பமான கால நிலையும், துன்பந் தருதலாகிய நிலையும் சூறை ஆடல் முதலாகிய மக்கள் ஒழுக்க முறையும், எஞ்சி நின்ற வெப்பமே நிறைந்த புறம்போக்கு நிலப்பகுதி பாலையெனவும் ஐந்தாவதாகப் பகுக்கப்பெற்று ஐந்து திணை ஒழுக்கமெனவும் பண்டைத்தமிழ் இலக்கண நூல்களில் வழங்கக் காணலாம். அவற்றுள் :—

1. குறிஞ்சி : மலையும், மலையைச்சார்ந்த இடமுமாம். அந்நிலத்தில் கூதிர் (குளிர்) காலம் சிறக்கும். அந்நிலமக்கள் குன்றவர், குறவர், கானவர்

இறவுளாராதியோர்;இவர்களுள்ளே உயர்ந்த நிலையினரும் தாழ்ந்த நிலையினரும் உளர். இவர்களது தொழில் அங்கேயே வித்திவிளைத்தல், தேனெடுத்தல், கிழங்ககழ்தல், வேட்டமாடுதல், சுனைகான்யாறு ஆடல், வெறியாட்டயர்தல் முதலியனவாம்.

2. முல்லை : காடும், காட்டைச் சார்ந்த இடமுமாம். இந்நிலத்தில் கார்காலமும் மாலைப்போதும் சிறந்த பொழுதுகளாம். ஆயரும், இடையரும் இந்நிலமக்களாவர். வித்தி விளைத்தலும், பசுக்காத்தலும், கான்யாறு ஆடலும், குரவைக் கூத்தயர்தலும், பண்டமாற்றுதலும், இவர்களது தொழிலாம். இவர்களுள்ளும் உயர்ந்தோர் தாழ்ந்தோர் கொள்கை உண்டு.

3. மருதம் : ஆறும், ஆற்றைச்சார்ந்த இடமுமாம். வேனிற்காலம் இந்நிலத்திற்குச் சிறந்த பொழுதாம். இந்நிலமக்கள் உழுநரும் (வேளாளர்) கடையினரும் ஆவர். இவர்களுக்கு விளைத்தலும், பண்டமாற்றுதலும், புதுப்புனலாடலும் (நீராடல்), இந்திரவிழா அயர்தலும் முதலியவை தொழில்களாம்.

4. நெய்தல் : கடலும், கடலைச்சார்ந்த இடமுமாம். பனிக்காலம் இதற்குச் சிறந்தபொழுதாம். அளவரும், கரையாரும் (செம்படவர்), இந்நில மக்களாவர். இவர்கட்கு உப்பு அமைத்தலும், மீன் பிடித்தலும், கடலாடலும், மீன் உப்புப் பகர்தலும் முதலியன தொழிலாம். இவர்களுள்ளும் உயர்ந்தோரும் தாழ்ந்தோரும் உளர்.

5. பாலை : எப்பொருளும் விளையாத வெப்பமிகுந்த மணல் வெளியாம் ; முதுவேனில் சிறந்தபொழுதாம். மன்னவர்க்குத் துணைசெய்யும் மறவரும், அரசு முறைக்கடங்காத குறும்பரும், கொன்றுண்டு வாழும் எயினரும் (வேடர்), இந்நிலமக்களாவர். வேந்து வினைபுரிதலும், பகற்சூறையாடலும், ஆறு அலைத்தலும், வேட்டமாடுதலும், கொற்றவை விழாவயர்தலும், இவர்களது தொழிலாம்.

நூலோர் தமிழருக்கு ஒழுக்கங் கூறுமிடத்து அவ்வந்நிலத்துக்குரிய தன்மையை ஒத்து அவ்வந்நிலப் பெயரால் திணை (ஒழுக்கம்) கூறுவர். எங்ஙனமெனில், மக்கள் ஆண் பெண் கூட்டம் (புணர்ச்சி) கூறும்போது குறிஞ்சிக்கேற்ற குளிர்ச்சியும், குளிர்ந்த உள்ளப் பண்பும் உடைமையால் அதனைக் குறிஞ்சித் திணையென்பர். மக்கள் இல்வாழ்க்கை முறைமையில் கூடி வாழ்தலாகிய ஒழுக்கத்தை முல்லைநிலம்போலும் இனிமையும் வளமுந் தருதல்பற்றி முல்லைத்திணை யென்பர். மக்கள் கூட்டத்திற்கு இன்பம் பயக்கும் உழுதலாகிய ஒழுக்கத்தை ஓடுகின்ற ஆற்றுநீரைச் சிறைப்படுத்திக் கழனிகளை வளஞ்செய்யும் மருதநிலம்போலும் பயன்தருதலால் மருதத்திணையெனக் கூறுவர். நட்புச்செய்தோர் பிரிவுபடநேர்ந்தகாலத்து உள்ளத்துண்டாவதாய இரங்குதலாகிய ஒழுக்கங் கூறும்போது அது, எஞ்ஞான்றும் 'ஓ' என்னும் இரைச்சலையும், புலால் நாற்றத்தையுமுடைய நெய்தல் நிலப்பண்

பை ஒத்திருத்தலால் அதனை நெய்தற்றிணை என்பர். காதல் மிக்குடையோர் உடன்போக்கு நிகழுங்காலத்து அவர்கள் ஒழுக்கத்தைக் கூறுங்கால், அதனை அக்காலத்து உள்ளக் கொதிப்புப்போலும் வெம்மையுடைய பாலைத்திணை யென்பர். இத்தகைய பொருட்பாகுபாடு (அகத்திணை யிலக்கணமுறை) செய்து முறைகொள்ளல் தமிழர்க்கும் தமிழ்க்குமே உரிய பண்பாம்.

மேற்கூறிய ஐந்துவகை நிலப்பகுதியுள்ளும் பலவகையான தொழில் பற்றிய குடிப்பெயர் பெற்ற தமிழ்மக்கள் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்னும் இரண்டு பகுதியில் அமைந்திருந்தாலும், பிற்காலத்து தொழில்முறைப் பொதுவகைப் பாகுபாட்டால் அரசர், வணிகர், வேளாளர், அந்தணர் என நான்கு வகையால் அமைந்தனர். அரசர் தலைமைக் குடியாயினர், ஆட்சி முறையும் காவல் முறையும் உடைமையின். இப்பகுதியில் அரசர்களும், அவர்கள் தலைமுறையார்களும், படைக்காவலர்களும், அடங்குவர். ஐந்நில மக்களுள்ளும் பண்டமாற்றுச் செய்தோர் வணிகர்கள் (செட்டிகள்) ஆவர். ஐந்நில மக்களுள் நில உரிமை பெற்று வளம் பெருகச் செய்வோர் உழுநர், வேளாளர். இவருள் உழுவிப்போர் உழுவோர் என இருவகையினர். உழுவிப்போர் வேளாளரும், உழுவோர் கடையரும் ஆவர். கல்வி, அறிவு, ஒழுக்கங்களாற் சிறந்து, இல்லறத்தை வெறுத்து, பொதுமக்கள் நன்மையைநாடி, செந்தண்மை பூண்டு ஒழுகுவோர் அந்தணராவர். இவர்கள் பண்டைக்காலத்துப் பல குடியினருள்ளும் தோன்றி, கடவுள் வழிபாடும், வழிபாடு பயிற்றலும் மேற்கொண்டு ஒழுகினர். இவர்களேயன்றிக் கல்விமுதிர்ச்சியால் இல்லறத்துள் நின்று மக்கட்கு வழிகாட்டிகளாயிருந்தோர் அறவோர் எனவும் பெயர் பெற்றிருந்தனர். இந்நால்வகைத் தொழில்களேயன்றி, கடவுட்பேணல், கல், மரம், உலோகம் முதலிய தொழிற் செய்தலாகிய வேலைகளுக்கு வேறு வேறு கூட்டத்தார் இருந்தனர். அவர்கள் பார்ப்பார் எனவும், கம்மியர் எனவும் பெயர் பெற்றனர். இக்குடிப் பெயர்கள் அனைத்தும் இக்காலத்தும் வழங்குகின்றன. பண்டைக்காலத்துப் பல வகைத் தொழில் சொய்வோருள் உயர்வு தாழ்வு அவரவர் நிலைமை கல்வி செல்வம் உடைமை முதலியவற்றால் குறிக்கப்பட்டனவே யன்றி ஒரு கூட்டம் உயர்ந்தது, ஒரு கூட்டம் தாழ்ந்தது என்ற நியதியாலன்று. இந்நிலைமை பின்னே நாட்செல நாட்செல ஒற்றுமை குன்றுதலானும், அன்னியர் இடையே புகுந்து வேற்றுமை மல்குவித்தமையாலும், உயர்ந்த கூட்டம், தாழ்ந்த கூட்டம், தாழ்மை ஏற்றுக்கொள்ளாத கூட்டம், தீண்டாச் சாதி என்று இவ்வகைப்பட்ட பிரிவுகளும், அவற்றுள் சாதிக் கலகங்களும் மலிந்தன. இது தற்கால நிலை.

இனி, இந்நிலைமையால் நாம் எய்தியுள்ள துன்பங்களை, அந்நியராற் படும் அவமானங்களைப், பலப்பட விரித்துக் கூறுதற்கு இடமுங் காலமும் போதா. சுருங்கச்சொல்லின் :—

மக்கள் முதன்முதல் பேசத்தொடங்கி அவர்கள் அறிவோடு வளர்ந்து

அழகு திருத்தமெல்லாம் பெற்றதற்காதாரமாய், என்றும் அழியாத உயர் நிலையெய்தி யிருக்கின்ற நம் தாய்மொழியாகிய தமிழ் தன் நிலைமை கெட்டு ஆதரிப்போரின்றி ஒளி குறைந்திருக்கின்றது. அம்மொழியின் மக்களாகிய யாமும் தாய் என்னும் பற்றின்றி அதனைப் புறக்கணிக்கின்றோம். நம்மவருள்ளும் சிலர், தமிழும் ஒரு மொழியா? அதனைப் பயின்று வளர்த்தால் பயனும் உண்டோ? என்று எளனமுஞ் செய்வர். தமிழ்த்தாயை இந்நிலைமைக்கு வைத்திருக்கும் நாமும் அன்னியமொழியினர்க்கு அடித்தொண்டராய் நிலைமை குன்றி யிருக்கின்றோம். இதனை விரிக்கிற் பெருகும்.

இனி யாம் செய்யத்தக்கது யாது? அடிமைக்குடிகளா யிருத்தல் நம்மவர்க்குத் தகுமா? ஒற்றுமை வேண்டும். ஒற்றுமை யேற்படின் அவசியமாகிய சகல காரியங்களும் முடிவுபெறும். தமிழை வருந்திக் கற்று, அதனைப் போற்றி ஆதரித்தல் வேண்டும். தமிழ் மொழியை ஆதரிப்போர்பலர் முன் வருவாராயின், தமிழ் எங்கும் பரவும். தமிழைக் கற்கவும், ஆதரிக்கவும், பரவச் செய்யவும் எல்லாம்வல்ல இறைவனை இறைஞ்சுவாம்.

தி. போ. மாணிக்கவாசகம், வரகனேரி.

---

## ஒற்றுமையி னுயர்வு.

இந்த இடமகன்ற பூமியில் பல பிரிவுகள் உள்ளன. இவைகளைக் கண்டங்கள் என்பர். அக்கண்டங்கள் பல தேசங்களையும், தேசங்கள் பல ஜில்லாக்களையும், ஜில்லாக்கள் பல கிராமங்களையும் கொண்டிருக்கின்றன. இப்பிரிவுகளில் மாநுடர்களும் பற்பலவிதமான பேச்சு, குணம், ஒழுக்கம் ஆகிய இவைகளையுடையவர்களாக இருக்கின்றார்கள். தொழில், நேர்மை முதலியனவும் வேறுபாடேயாம். தேவ வழிபாடு, அடியார் பக்தி, சாஸ்திர ஞானம் இவைகளால் இந்தியவாசிகள் மேம்பாடுடையவர்கள். பொன்விளை பூமி இந்தியாவே. அதில் எடுத்த காரியத்தை ஒற்றுமையாகச் செய்து முடிக்காத ஒரு குறையே பெருங்குறை. என்னை? பல சமயங்களில் நம்மவர் ஏதாவதொரு விஷயமாக கூட்டங்கூடுவது ஒன்றேயன்றிக் காரியசித்தியடையாமல் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான மாறுபாடடைவது கண்கூடு. தொடங்கும்போது ஆரம்பசூரத்தன்மையே யன்றிப் பெருமுயற்சி வரவரக் குறைந்துபோய்விடும். "பழகப் பழகப் பாலும் புளிக்கும்" என்றவாறே ஒவ்வொரு காரியமும் உவர்த்து நீக்கப்படுகின்றது. இதனையறிந்தே மேலை நாட்டவர்கள் இந்தியாவில் நாட்டம்வைத்து எல்லோரையும், அடிமைகளாக்கிவிட்டனர். சுதந்தரம் வேண்டும் எனறு விரும்பினோரும் தம்முள்ளே பிரிவுகொண்டு பலத்தை யிழக்க நேரிட்டிருக்கிறது. பற்பல ஜாதி, பற்பல் மதம், பற்பல தொழில் முதலியவை நேற்று இன்று உண்டாயிருக்கப்பட்டவையன்று. இவைகளை இப்போது ஒன்றாக்கிவிட்டால் சுதந்தரங் கைகூடிவிடுமாம்! என்ன மயக்கம் இது? இவற்றை யார் ஒன்றாக்குவது? இவை

போன்ற பற்பல பேதங்கள் மேலைநாடுகளிலு மிருக்கின்றனவே! ஆங்கில பாஷாசிரோமணிகள் இவைகளை ஏன் கூர்ந்து நோக்கவில்லை? ஒற்றுமை வருதற்காகச் சமபந்தி போசனமும் வித்தியாசமற்ற கல்யாணமும் வேண்டுமோ? மனப் பரிசுத்தம் ஒன்று போதாதா? போதும்; அன்றியும் இரக்கம் வேண்டும்! தன்னுயிரைப்போல மன்னுயிரைச் சிந்திக்கவேண்டும். மகாத்மா காந்தியடிகளும் மன ஒற்றுமையைத்தான் பொது விஷயங்களில் உபயோகிக்கக் கூறுகின்றனர்.

"பருந்தையடித்துக் கழுகுக்கு விருந்திடுவது" போல, தற்போது வல்லமை குறைந்தோரைப் பேராற்றலுடையோர் வருத்துவதே சகசமாயிருக்கிறது! இப்படி யிருந்தால் ஒற்றுமையை எந்தக் கடையில் விலை கொடுத்து வாங்குவது! வாயில்லாப் பிராணிகளானால் ஒரே வெட்டுத்தான்! ஐயையோ! பாவம்!! பெரும்பாவம்!!! ஒற்றுமைக்கு எதிராக முன்னிற்பது மாச்சரியம். இது ஒரு பெரும் பாழான கெட்டவழி. இதனால் ஒற்றுமைச் சரக்கு முற்றாக விலையாகிவிட்டது. கல்வி, கேள்வி, நல்லறிவு மிகவுங் குறைந்துவிட்டன. பிறரைக் கெடுக்கவேண்டும் என்பது பலரிடத்திலும் தோன்றிவிட்டது. கடவுளைத் தியானஞ் செய்தற்குப் பதிலாக, மித்திரபேதத்தியானம் குடிகொண்டுவிட்டது. பாராயணமும் அதுவே! இனிமேல் அடையவேண்டுவன யாவை? மநுடரை மநுடர் வெட்டி வயிறு நிறையத் தட்டிக் கொள்வதுதான்! இதனை எழுதவும் மனங் கூசுமல்லவா? இந்த இழிவான நிலைமை அடியோடு மாறவேண்டும். ஜீவஹிம்சை நீங்கவேண்டும். வருணச்சிரம தர்மங்கள் தழைக்கவேண்டும். அந்நியமதப் பிரவேசஞ்செய்தவர்களைப் பிராயச்சித்தஞ்செய்து நம்மதத்திற் சேர்த்தல் வேண்டும். ஆதி திராவிடர் என்றவர்கள், நமது சைவாகம முறையான ஆலயங்களில் வெளியில் நின்று நந்தனார்போலப் பிரார்த்தனை செய்தல் வேண்டும். கோயில்களைக் கொலைக்களமாக்காதிருத்தல் வேண்டும். மனம் வாக்குக் காயங்களாகிய திரிகரணங்களினாலும் ஜீவகாருண்யத்தை வளர்க்கவேண்டும்; பொதுத் தர்மங்களில் நமது சகோதரர்களின் ஒற்றுமையும், திரவிய உதவியும் குறைவுறாது வளர்ந்துவரச்செய்தல் பெரும் நன்மையாகும். கோயில், திருமடம், கலாசாலை, பத்திரிகாபிவிருத்தி ஆகிய இவற்றிலும் ஒற்றுமை வளரவேண்டும். ஒற்றுமை பெருமைக்கு மார்க்கமாகும்.

"எத்தால் வாழலாம் ஒத்தால் வாழலாம்."

பண்டிதர், வ. மு. இரத்திநேசுவரையர்,
கண்டரமாணிக்கம்.

---

## இஸ்லாத்தின் உண்மை.

### 1-வது உபந்நியாசம்.

### இஸ்லாத்தின் உயிர்.

1. உண்மையை யறிவது ஞானம். உண்மையை நம்புவது பக்தி. உண்மையில் நடப்பது மார்க்கம். இது இல்மு, ஈமான், இஸ்லாம் எனப்படும்.

2. ஆண்டவன் அறிவையும் நம் அறிவையும் பெரிய நெருப்பு சிறிய நெருப்புக்கு உவமை கூறலாம். ஏனென்றால், சிறிய நெருப்பும் பெரிய நெருப்பாய் வியாபிக்கக்கூடுமானதா யிருக்கிறது.

3. ஆண்டவன் அறிவுக்கு மாற்றம் செய்வதில்லை. நாமும் அவன் அறிவுக்கு மாற்றம் செய்யக்கூடாது. ஆகையால் அவன் ஆக்ஞை நாமும் நம் அறிவுக்கு மாற்றம் செய்வது தகாது.

4. நம் சொந்த ஆத்மாவுக்குப் பிரியமானதைப் பிறருக்குச் செய்யலாம். நாம் சொந்த ஆத்மாவுக்குப் பிரியமில்லாததைப் பிறருக்குச் செய்யலாகாது.

5. ஏனெனில் நம் ஸ்திரீயை ஒருவன் தொட நமக்குப் பொருத்தமில்லை. ஆகையால் வேறொருவன் ஸ்திரீயை நாம் தொடுவது தகாது.

6. நம் பொருளை ஒருவன் திருட நமக்குச் சம்மதமில்லை. ஆகையால் வேறொருவன் பொருளை நாம் திருடுவது தகாது. இப்படியே பாவமான காரியமெல்லாம் நம் அறிவுக்கு மாற்றமாகவே யிருக்கும்.

7. சூரியனிலிருந்து சந்திரன் ஒளியைப் பெறுவதுபோல் நம் அறிவு ஆண்டவன் அறிவில் நின்றும் ஒளியைப் பெறுகிறது.

8. பெரிய நெருப்பு சிறிய நெருப்பு கொளுத்துகிற தன்மையில் ஒன்றாயிருப்பதுபோல, பேரறிவு சிற்றறிவு அறிகிற தன்மையில் ஒன்றாயிருக்கின்றன.

9. ஆண்டவன் அறிவில் வெளியாகாதது நம் அறிவில் வெளியாவதில்லை. அவன் அறிவில் கெட்டதாயிருப்பது நம் அறிவில் நல்லதாயிராது. அவன் அறிவில் நல்லதாயிருப்பது நம் அறிவில் கெட்டதாயிராது.

10. ஆண்டவன் வெறுப்புக்கும் அவன் இஷ்டத்துக்கும் நாம் எப்போதும் ஒற்றுமையாகவே யிருக்கவேண்டும். ஆகையால் நம்மை அவன் தனக்குப் பிரதிநிதி யாக்கினான்.

11. நாம் ஆதியில் ஆண்டவனிடம் நம் அறிவுக்கு மாற்றம் செய்வதில்லையென வாக்குறுதி செய்திருக்கிறோம்.

ஆண்டவனின் உண்மை.

1. ஆண்டவன் இருளுமல்ல, ஒளியுமல்ல, அவன் உண்மையை அவன் தான் அறிவான். அவனை அவனேயல்லாது அவனுக்கு அன்னியமாயுள்ளவை அறியா.

2. அவன் எல்லாமாகவும், எல்லாம் அல்லவுமாகவு மிருக்கிறான். அவன் சொரூப அமிசப்படி எல்லாம் அவனே. அவன் அரூப அமிசப்படி எல்லாம் அவனல்ல.

3. ஆண்டவனின் அமிசம் சிருஷ்டிப்புக்களிலும், சிருஷ்டிப்புக்களின் அமிசம் ஆண்டவனிலும் சம்பந்தப்பட்டிருப்பதால் தன் அறிவுக்கு மாற்றமில்லாமல் நடக்கும் யோக்கியதை உள்ளவனாக மனிதனைப் படைத்தான்.

4. ஆண்டவனில் சர்வ தத்துவமுமுண்டு. உதாரணமாக இரண்டு தத்துவத்தைமட்டும் இங்கு எடுத்துக் காட்டுவோம். ஒன்று தன்னைச் சுயமாய்ப் பார்ப்பது, மற்றொன்று தன்னை அன்னியமாய்ப் பார்ப்பது. அன்னியமாய்ப் பார்ப்பது மாயை எனப்படும்.

5. சுயம் மேலாகவும் மாயை கீழாகவுமிருக்கின்றன. ஆண்டவன் தன் சுயத்துக்கு எதையும் நிகராய்ப் பாவிக்கவில்லை. ஆகையால் தன் சுயத்துக்கு இணைகூடாதெனக் கண்டிக்கின்றான்.

6. தன் சுயத்தின் இச்சையால் சிருஷ்டிப்புக்களை வெளிப்படுத்தினான். தன் சுயத்தைப்பார்க்கிலும் அன்னியமானவைகளைப் பெரிதாகக் காணவில்லை. என்றாலும் கடலும் அலையும் ஜலம்தான்.

7. மாயை யென்பது அவன் தோற்றத்தில் சாத்தான் எனப்படும். அவன் மிரட்டுதலில் அகப்படவேண்டாம். அவனிடம் மருளே தவிர அருளில்லை. வேற்றுமையைப் போதிப்பான். இதுதான் பாவத்துக்கு வித்து.

8. பாவகுணத்தால் அவனுக்கு இணை உண்டாகின்றது. நான் வேறு நீ வேறு என்கிற எண்ணத்தால் எனக்கு ஒரு விதமும் உனக்கு ஒருவிதமும் பாரபட்சமாய் நடக்கும்படியாயிருக்கிறது.

9. நற்கிருபை, ஜெபம், தபம், தர்மம் முதலானவைகளால் அவன் கருணையை அடையப் பல வழிகளுண்டு. இதில் நம் முயற்சியைப் பெரிதாகக் காணாமல் அவன் அருளையே பெரிதாகக் காணவேண்டும்.

10. அவன் கருணை நம் முயற்சியிலும் நம் முயற்சி அவன் கருணையிலும் சம்பந்தப்பட்டிருக்கின்றன. சர்வமும் ஆண்டவன் உண்மையைக் கொண்டு தேவையுள்ளதாயிருக்கின்றது.

11. அவன் தன் சுயமாய்ப் பார்க்கிற அறிவுக்கும் அன்னியமாய்ப் பார்க்கிற அறிவுக்கும் பெரிய வித்தியாசமுண்டு. சுயமாய்ப் பார்ப்பதில் வேற்றுமையில்லை. அன்னியமாய்ப் பார்ப்பதில் வேற்றுமையுண்டு. மெய்க்குச் சுகமும் பொய்க்கு வேதனையுமுண்டு. (தொடரும்.)

மு. நா. செய்யது முகம்மது, பொருள்வை சேரி,
சிக்கில் P. O., (தஞ்சை ஜில்லா.)

## இஸ்லாத்தின் உண்மை.

குறிப்பு :—மேற்கண்ட விஷயங்களில் முக்கியமான அம்சங்களில் பெரும்பாலானவை நமது வேதத்தில் கூறியுள்ளதற்கு ஒப்பவேயிருக்கின்றன. அவற்றை மேற்கண்ட பத்தி இலக்கப்படி நம் நூல்களில் கூறியுள்ளவாறு கீழே விவரிக்கிறோம் :—

**'இஸ்லாத்தின் உயிர்'' என்பதில்,**

**2-ம் பத்தி—** ஆன்மா கண்டம், பரமான்மா அகண்டம். அஞ்ஞான

திசையில் கண்டமாயிருக்கும் ஆன்மா பிரமான்மா வைகவிய ஞானத்தை யடைந்தபோது அகண்டாகார நிலையை யடைகிறது.

7-ம் பத்தி—ஆண்டவன் அறிவிக்கும் அறிவு, நாம் அறியும் அறிவு.

8-ம் பத்தி—சச்சிதானந்த சொரூபத்தையுடைய தன்மையில் ஆன்மாவும் பரமான்மாவும் ஒன்றே. திரி தீவட்டி இரண்டும் அளவில் பேதப்படினும் பிரகாசம் அளிக்கும் குணத்தில் ஒன்றேயாவதுபோல்.

" ஆண்டவனின் உண்மை " என்பதில்,

1-ம் பத்தி } இவை நமது வேதத்தில் கூறியுள்ள
2-ம் பத்தி } வாக்கியங்களே.

4-ம் பத்தி—இது பிராந்தி ஜதாதான்மியம்-அதாவது மாயை மயக்கத்தால் தன்னைப் பரமான்மாவினும் வேறாகக் காண்பது. இதுவே அஞ்ஞானம் அல்லது மாயையின் மூலம் எனலாம்.

6-ம் பத்தி—கடல் அலை திருட்டாந்தத்தோடு கூறப்பட்ட விஷயம். "அலை திவலை நுரை கடலிலுதித்தொடுங்குமாபோல் அகிலாண்டமும் ஆண்டவனிடத்திலுதித்தொடுங்கும்" என்ற பொருளையே யுடையது.

9-ம் பத்தி—"அவனருளாலே யவன்றாள் வணங்க வேண்டும். அருளை முன்னிட்டே நம் முயற்சியைச் செய்யவேண்டும் " என்பது.

11-ம் பத்தி—"சுயமாய்ப் பார்க்கிற அறிவு" என்பது சாக்ஷாத்கார நிலை. இது தன்னையன்றி அன்னியமொன்றும் தோன்றாத அத்வைத நிலை. இதில் சுகமன்றித் துக்கத்திற்கேதுவில்லை.

துவைத நிலையில் " நான் " என்ற ஒரு முதலுளதால் பலவிதத் துன்பங்களுமுண்டு.

பத்திரிகாசிரியர்.

## மாதர் நீதி மஞ்சரி.

(339 - ம் பக்கத் தொடர்ச்சி.)

தமது அருமையான கணவர் இறந்துவிட்டால், அதன்பிறகு தாம் உயிர் வாழவேண்டுமென்று கருதாமல், தாமும் அவர் அடைந்த நிலைமையை யடையவேண்டுமென்று விரும்பி யொழுகும் மாதர்கள் நல்ல அசுவமேத யாகம் செய்தோர் அடையும் பயனை யடைவார்கள்; பாவத்தின் மிகுதியால் யமதூதர்களிடம் சிக்கியிருக்கும் தமது காதலரை அவ்வியமதூதரிடத்தினின்றும் விடுவித்துக்கொண்டு அவரோடு தேவலோகத்தை யடைவார்; கொடிய யமன் தன் கண்களால் அவரைப் பார்ப்பானாயின் அக்கணமே அவர்தம் நாயகரைக் கைவிட்டோடுவான்.

வட திசையில் விளங்கிக்கொண்டிருக்கும் அருந்ததியைப்போன்ற சிறந்த கற்பரசிகளுடைய காந்தியானது, தமது கண்களுக்குப் புலப்பட்

டால் மிகுந்த வெப்பத்தையுடைய அக்கினியும், சூரியனும், வெண்மையாகிய சந்திரனும் ஒளி குன்றிப் பிரகாசமில்லாமல் தோன்றும். தனது நாயகன் மாண்டபிறகு உயிர் வாழாமல் அவனுடன் உயிர் துறந்த கற்பினையுடையவள், அநேகாயிர வருடகாலம் பொன்னுலகமாகிய சொர்க்கலோகத்தில் தன் கணவனோடு சுகமனுபவித்துக்கொண்டிருப்பாள். கற்பிற் சிறந்த காரிகையைப் பெண்ணாகப் பெற்ற தாயார் தந்தை யென்னும் இருவருடைய மரபிலுள்ளவர்களும் சுவர்க்கத்தை யடைவார்கள். கற்பு நிலையினின்றும் தவறிய அற்பப் பெண்கள் தங்கள் தாய் மரபு, தந்தைமரபு, கணவன் மரபு என்னு மிம் மூன்றுமரபினரையும் நரகத்தில் விழுந்து வருந்தும்படி செய்வார்கள். பதிவிரதைகளின் பாதங்கள் பூமியில் எவ்விடத்தில் படிந்தபோதிலும் அவ்விடம் பக்தர்கள் அடையும்படி இச்சிக்கின்ற புண்ணியஸ்தலங்கள் எல்லாவற்றிலும் மேலான புண்ணியஸ்தலம் என்று பெரியோர்கள் சொல்வார்கள்.

கங்கை, யமுனை, காவிரி முதலிய புண்ணிய நதிகள் யாவும், தம்மிடத்தில் மூழ்குவோருடைய சகல பாவங்களையும் பரிகரித்துப் பரிசுத்தமாக்கும் வல்லமை பெற்றவைகளாயிருந்தாலும், தங்கள் பாவங்களைப் போக்கிக்கொள்ளும்பொருட்டு எப்பொழுது பதிவிரதைகள் தம்மிடத்தில் வந்து மூழ்குவார்களோ என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்து, அதன்படியே அவர்கள் வந்து பரிசிப்பதனால் தங்கள் பாபங்களைப் போக்கிக்கொள்ளும். ஒரு வீடானது நவரத்தினங்களிழைத்த எவ்வளவு சிறப்புடையதாயிருந்தாலும், கற்பினையாபரணமாக வுடைய மாதர்கள் அங்கில்லையானால் அவ்வீடானது பேய்கள் வசிக்கும் காட்டிற்குச் சமானமாகும். சுடுகின்ற வெப்பமாகிய கிரணங்களையுடைய சூரியனும், குளிர்ச்சிபொருந்திய சந்திரனும், அக்கினியும் கற்புடைய மாதர்மேல் பரிசிக்கையில் மனம் அஞ்சுவார்கள். நாயகரை யிழந்து வைதவ்யமடைந்த மடந்தையர் கற்புநெறி தவறுவாராயின், ஐயோ! அவர்கள் தங்கள் குலத்தினர் யாவரையும் வெவ்விய நரகில் விழச் செய்வார்கள். தம் கணவர் சற்றும் அழகில்லாதவரா யிருந்தாலும், பெரிய வியாதியினால் பீடிக்கப்பட்டவராயிருந்தாலும், நித்திய தரித்திரரா யிருந்தாலும், வயதில் முதிர்ந்த விருத்தாப்பியராயிருந்தாலும் அவைகளுக்காகக் கொழுநரிடத்தில் யாதொரு குறைவையுமெண்ணாமலிருப்பது கற்புடைய பெண்களின் கடமையாம். மனைவியானவள், கணவனிடத்தில் தாயைப் போல தயையுள்ளவளாயும், தாதியைப்போல் பணிவிடை செய்பவளாயும், இலக்குமியைப்போல் அழகுள்ளவளாயும், பூமியைப்போல் பொறுமையுள்ளவளாயும், சயன காலத்தில் வேசியைப்போல் இன்பஞ் செய்பவளாயும், யுக்தி சொல்வதில் புத்தி கூர்மையுள்ள மந்திரியைப்போல்பவளாயும் இருத்தல் வேண்டும்.

தன் கணவன் வீடானது நான்கு பக்கங்களிலும் வழியுள்ளதாயும், மிகவும் சிறியதாயும், மழைத் துளிகள் உள்ளே ஒழுகும்படியாகத் துவாரங்க

ளுள்ளதாயுமிருந்தாலும், அவ்வித தரித்திரத்திற்காகத் தன் கணவனை வெறுத்துக்கொள்ளாமல் அவன்மேல் அன்புகொண்டு, இயன்றமட்டும் இல்லற காரியங்களை நேர்மையாகச் செய்து முடித்து, ஊரிலுள்ளோர் யாவரும் தன்னைப் புகழ்ந்து கொண்டாடும்படி சிறந்து விளங்கும் கற்புள்ள மனைவி வசிக்குமிடமே வீடு என்னும் பொருளுக்கேற்றதாகும்.

## இல்லற முறை.

இனி, மாதர் தங்கள் வீட்டுக் காரியங்களைச் சரிவரச் செய்து முடிக்க வேண்டிய முறைமையினைச் சிறிது விளக்குவாம்:

ஸ்திரீகள் விடியற்காலையில் அருணோதயத்திற்கு முன் நித்திரை நீங்கி எழுந்திருத்தல்வேண்டும். எழுந்தவுடனே, கணவனையே வழிபடு கடவுளாகக் கருதித் துதித்தலவசியம். பின்பு, காலைக்கடனை முடித்துத் தந்த சுத்தி செய்துகொண்டு, வீட்டின் முன்புறத்திலும், பின்புறத்திலும், முற்றத்திலும் சாணந்தெளித்துப் பெருக்கி, தகுந்த விடங்களில் கோலமிட்டு அடுப்புச் சாம்பலை வாரி ஒதுக்கிடத்தில் கொட்டி, சுத்தஞ் செய்தல்வேண்டும். இக்காரியங்கள் சூரியோதயத்திற்கு முன்பே செய்து முடித்தலவசியம். வீட்டுப் புருஷர் ஏதாவது காரியமாக வைகறையிலெழுந்து வெளியிற் செல்வதாயிருந்தால், அதற்கு முன்பே சாணந் தெளித்துவிடல்வேண்டும்; அவர்கள் வெளியிற் சென்றபிறகு சாணந் தெளிக்கலாகாது.

வீடு வாசல்களை யெல்லாம் சுத்தம் செய்து முடித்தபின், சமையல் செய்யுமிடத்தையும், அடுப்பங்கரையையும் மெழுகுதல் வேண்டும். பின்பு, பாத்திரங்களைத் துலக்கவேண்டும் மட் பாத்திரங்களை ஸ்நானஞ் செய்த பிறகே தொடவேண்டும். பித்தளை வெண்கலப் பாத்திரங்களைச் சாம்பலினாலும், ஈயப் பாத்திரங்களைச் சாணத்தினாலும், தாம்பிரப் பாத்திரங்களைப் புளியினாலும், மரப் பாத்திரங்களையும், கற் பாத்திரங்களையும் வைக்கோலைக் கொண்டும் தேய்த்துக் கழுவுதல் வேண்டும். சுத்தஞ் செய்யும் வேலை முடிந்தபின் நீராடி, நெற்றியிற் குங்குமமணிந்து, புதிய ஜலங்கொண்டு சமையல்வேலை தொடங்கவேண்டும். போஜன பதார்த்தங்களாகிய அரிசி பருப்பு முதலியவைகளைக் கல், உமி முதலியவைகளில்லாமல் சுத்தஞ் செய்த பிறகே உபயோகிக்கவேண்டும். அம்மி, குழவி, உரல் முதலியவற்றையும் அன்றாடம் உபயோகத்திற்கு முன்னும் பின்னும் செவ்வையாகச் சுத்தப் படுத்திக்கொள்ளவேண்டும். எல்லாப் பதார்த்தங்களையும் மூடிவைக்க வேண்டும். சமயல் செய்யுமிடத்தில் மூக்குச்சிந்தலும் எச்சில் சிதறும்படி பேசுதலும், இருமுதலும், தலை சொரிதலும் அநுசிதமாம். கையில் சிறிது அசுத்தம்பட்டால் கைகழுவிக்கொண்டு, தனியாக வைத்துக்கொள்ளுங் குட்டையில் கையைத் துடைத்துக்கொள்ளவேண்டும்.

சமையல் வேலை முடிந்ததும் அவ்விடத்தையும் போஜனம் மிடத்தையும் சுத்தமாய்ப் பெருக்கித் தண்ணீர் தெளிக்கவேண்டும்

பிடப் புகும்பொழுது முதலில் இலையைச் சுத்தமாகக் கழுவிப் போடவேண்டும். ஜனங்கள் அதிகமாகச் சாப்பிட உட்காரும்பொழுது எல்லா இலைகளையும் கழுவிப் போடுவதென்றால் கஷ்டமான காரியமாகும். ஆகையால், அக்காலங்களில் இலைகளின்மேல் நன்றாகத் துடைக்கும்படி ஜலந் தெளிக்க வேண்டும். இதன் உண்மை தெரியாமல் அநேகர் இது ஒரு 'சாங்கிய' மென்றெண்ணிக்கொண்டு, பட்டும் படாமல் இரண்டொரு துளி தண்ணீர் தெளித்துவிடுகின்றார்கள். இலை போட்டவுடனே குடிநீர் வைத்துவிட்டுப் பிறகுதான் அன்னம் பரிமாறவேண்டும். அன்னம் பரிமாறும்போது கீழே சிந்திப்போகாமல் பார்க்கவேண்டும்.

திருவள்ளுவர் வாசுகியாரை விவாகஞ் செய்தபின்பு அவர் முதல் முதல் அன்னம் படைக்கையில், நாயனார் 'சிறு நத்தைக் குடுவையில் சிறிது ஜலமும் ஒரு ஊசியும் சாப்பிடுகையில் பக்கத்தில் வை' என்று சொன்னார். அவ்வாறே தினந்தோறும் அவ்வம்மணியார் வைத்துவந்தார். ஆனால் இது இன்ன காரியத்திற்கென்று அவரால் அறிய முடியவில்லை. நாயனாரும் அதை ஒருநாளும் உபயோகிக்கவேயில்லை. கேட்கவும் அவ்வம்மையார் விரும்பவில்லை. அவர் பிராணன் நீங்குந்தறுவாயில் கணவர் முகத்தைப் பார்த்தார். அக்குறிப்பை யறிந்த புலவர் பெருமான் 'உன் விருப்பம் யா'தென்று வினவ, அவர், அப்பொழுது தம் ஐயத்தை நிவர்த்திக்குமாறு கேட்டார். அதற்கு விடையாக, அவர், 'ஒன்றுமில்லை; அன்னம் பரிமாறும் போது சிந்திப் போவதுண்டானால் அதை ஊசியாற் குத்தியெடுத்து, அந்த நீரில் அலம்பி, உபயோகித்துக்கொள்ளலாமென்பது என்னெண்ணம்; அவ்வாறு சிந்தியதுமில்லை; ஒருநாளும் அதை நான் உபயோகித்ததுமில்லை' யென்றார். இதனால் அன்னம் பரிமாறும் முறை இனிது விளங்கும்.

அன்னம் படைக்கையில், சாப்பிடுவோர் இன்னது வேண்டுமென்று கேளாமுன் குறிப்பறிந்து வேண்டியவற்றைப் பரிமாறவேண்டும். எப்பதார்த்தத்தையும் அகப்பை அல்லது சிறு கரண்டியாலெடுத்துப் பரிமாற வேண்டுமேயல்லாமல் கையால் பரிமாறலாகாது.

பகற்போசன வேலை முடிந்ததும் படுத்துறங்குதல் கூடாது. 'பகலுறங்கார் நோயின்மை வேண்டுபவர்' என்பது பெரியோர் வாக்கு. அப்படியின்றிப் படுத்துறங்கினாலும் நெடுநேரம் நித்திரை செய்யலாகாது. மாலை வேளையானதும் வீதியைப் பெருக்கித் தண்ணீர் தெளித்துக் கோலமிடல்வேண்டும். வீடு வாசல் முழுவதையும் பெருக்கவேண்டும். பின்பு, கை, கால், முகம் இவற்றைக் கழுவிக்கொண்டு விளக்கேற்றி, புஷ்பஞ் [illegible]ரத்தி இலக்குமியை வணங்கவேண்டும். 'ஏர் பிடிப்பவன் என்ன செய்[illegible]ர் பானை பிடிப்பவள் பாக்கியம்' என்றபடி, பெண்களால்தான் வீட்டில் [illegible]மி சேர்வாள். ஆகலின், பெண்கள் மேற்கூறிய முறைகளையும் இன்[illegible]வபோன்ற மற்றவைகளையும் தட்டாமல் கைக்கொள்ளவேண்டும்.

எல்லாவற்றையும் விடாமல் கூறுவது சாத்தியமல்லவாகையால் சுருங்கக் கூற நேர்ந்தது.

தற்கால நவீன நாகரிகத்தின் மகிமையால் மேற்கூறிய பிராசீன இந்து மாதர் தருமம் எவ்வளவு சீர்கேடடைந்துளதென்பது யாவருக்கும் தெரிந்ததே. அவ்வகுப்பிற் சேர்ந்தோர் இம் முறைகளைப் பார்த்துப் பைத்தியக்காரர்கள், சுத்த கருநாடகங்கள் என்பர். அவ்வாறு கூறுவது அவர்கள் குற்றமல்ல.

சகோதரிகள் யாவரும் இதுவரையிலும் சொல்லிவந்த விஷயங்களைக் கவனித்து அவற்றிற் கூறியபடி கூடுமானவரையில் நடந்துவந்தார்களானால் இம்மையிற் புகழையும் மறுமையில் முத்தியின்பத்தையும் அடைந்து சுகமாக வாழ்வார்கள்

இத்தகைய கற்புநிலையைக் கைக்கொண்டொழுகிப் புகழ்பெற்ற நம் நாட்டில், பண்டைக்காலத்திலிருந்த ஸ்திரீரத்தினங்களின் சரிதைகளில் முன்னமே சொன்னவைகள் நீங்கலாக, மிகுந்துள்ளவைகளிற் சிலவற்றைச் சுருக்கமாகக் கூறி 'மாதர் நீதிமஞ்சரி' யென்னும் இத்தொடர் வியாசத்தை இனிது முடிப்பாம். (தொடரும்.)

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

## குரோதன வருஷப் பிறப்பு.

அனாதிகாலந்தொட்டே ஆழிசூழ்ந்த இவ்வுலகமானது காரணகாரிய வயப்பட்டு முக்குணவயத்தான ப்ரம்ம ஸ்வயரூபமாய் விளங்குகின்றதென்பது யாவரும் அறிந்ததே. நிற்க,

சிருஷ்டிகர்த்தாவாய் விளங்கும் ப்ரம்மதேவனின் அறுபத்தோராமாண்டின் 88-வது துவாபரயுகத்தில், இப்பரதகண்டத்தில் அஸ்தினாபுரத்தில் அவதாரபுருஷர்களாய்க் குந்திதேவியினிடம் ஜனித்து, தர்மத்தை நிலை நிறுத்தி, புகழுங் கீர்த்தியும் பெற்று, இற்றைக்கு ஐயாயிரத் திருபத்தேழாண்டின் முன் முடிவில் காலஞ்சென்ற பாண்டவர்களின் காலமென்று சொல்லத்தகுந்த ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தில் நிகழ்ந்த "பாகவத புராணத்தில்" காணக் கிடக்கிறபடி மாயையின் வயப்படாதாரெவருமில்லை.

ஆயினும் இப்பூபாரத்தை ஒழிக்கவேண்டி இப்பூவுலகில் துவாரகை என்னும் திவ்ய க்ஷேத்திரத்தில், வசுதேவருக்கும், தேவகி தேவியாருக்கும் புத்திரனாக ஸ்ரீ வைகுந்தவாசனே ஸ்ரீ கிருஷ்ணனாய் வந்தவதரித்து, ஆயர்பாடியில் நந்தகோபர் மனையில் வளர்ந்துவருங்காலத்தில் (முன் இராமாவதாரத்தில் திருவுளம்பற்றிய வாக்குப்படி) தன்னாட்டில் குடியிருந்த 16108 பதினாறாயிரத்து நூற்றெட்டு ஸ்திரீகளிடத்திலும், ஸ்ரீ கிருஷ்ணன் விளையாடிக்கொண்டிருக்குங் காலத்திலோர் நாள், ப்ரம்மதேவனின் மானஸீ

திரரில் சிரேஷ்டரான தும்புரு நாரதர் துவாரகாபுரியில் அந்த கிருஷ்ண பரமாத்மாவிடம் வந்து சம்பாஷித்துக் கொண்டிருந்தார். அச்சமையம், வேடிக்கை பார்க்கவெண்ணிய பகவான் அந்த நாரத முனியை மாயையின் வயப்படச் செய்தார். நாரதர் "ஸ்வாமீ! தாங்கள் இங்கு இருக்கப்பட்ட எல்லா ஸ்திரீகளுடனும் ஆனந்தமாய் விளையாடுகின்றீர்களே? அவர்களில் ஒரு பெண்ணை எனக்களிக்கலாகாதா?" என்று மிகுந்த ஆசையுடன் கேட்டார். பகவான் புன்னகையுடன் "நாரதரே! தடையாது? நானில்லாத வீட்டில் தாம் சுகமாயிருந்து போகலாமே" என்று பகர்ந்தார். நாரதர் பதிலுத்தரமின்றி அவ்விடம்விட்டு நீங்கித் துவாரகையிலுள்ள ஸ்திரீகளின் வீடுகள் முழுவதும் போய்ப் பார்க்கவே பகவான் ஒவ்வொரு வீட்டிலும் இருக்கக் கண்டு துவாரகை முழுதும் அலைந்து களைப்புண்டு நாட்டைவிட்டகன்று யமுனா நதியையடைந்து நீரில் மூழ்கி யெழுந்ததும் மாயையினால் தன் சுயரூபம் நீங்கிப் பெண் வடிவடைந்து நின்றார். பகவான் அங்குத் தோன்றிப் பெண்மையடைந்தநாரதரை யணைந்துபெற்ற அறுபது குழந்தைகளுக்கிட்ட பெயராகிய பிரபவ, விபவ, சுக்கில, பிரமோதூத, பிரசோற்பத்தி, ஆங்கீரச, ஸ்ரீமுக, பவ, யுவ, தாது, ஈஸ்வர, வெகுதானிய, பிரமாதி, விக்கிரம, விசு, சித்திரபானு, சுபானு, தாரண, பார்த்திப, விய, சர்வசித்து, சர்வதாரி, விரோதி, விகிர்தி, கர, நந்தன, விஜய, ஜய, மன்மத, துன்முகி, ஹேவிளம்பி, விளம்பி, விகாரி, சார்வரி, பிலவ, சுபகிருது, சோபகிருது, குரோதி, விசுவாவசு, பராபவ, பிலவங்க, கீலக, சௌமிய, சாதாரண, விரோதிகிருது, பரிதாபி, பிரமாதீச, ஆனந்த, ராக்ஷச, நள, பிங்கள, காளயுத்தி, சித்தாத்திரி, ரௌத்திரி, துன்மதி, துந்துபி, ருத்ரோத்காரி, ரத்தாக்ஷி, குரோதன, அக்ஷய என்பவைகளே 60 வருஷங்களாகும்.

அந்த 60 குழந்தைகளையும் ஈன்றபின் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவானவர் நாரதராகிய பெண்ணைக் கவர்ந்த மாயையை ஒழித்து அவர் கொண்ட பெண்மையை நீக்க நினைத்து, யமுனையில் மூழ்கச்செய்து, யதாரூபத்தை யருளி ஆசியும் புரிந்தனர். நாரதர் விடைபெற்றேகினர்.

அந்தக் குழந்தைகளில் 59-வது குழந்தையின் நாமதேயம் "குரோதன" வருஷம் என்பதாம். இது சிருஷ்டியாப்தம், 195 கோடியே 68 லட்சத்து எண்பத்தையாயிரத்து இருபத்தேழாம் வருஷத்தில் (கலியுகம் பிறந்து 5027-வது வருஷம்) இப்பூவுலகில் மூன்றுகோடியே இருபத்தாறு லட்சத்துப் பதினாலாயிரத் தெழுநூற்றைம்பத்தோராவது ஜனனமாக நம் ஆனந்தபோதினியின் பத்தாவது வயதில் பங்குனி மாசக் கடைசியில் (12-4-25) ஞாயிற்றுக்கிழமை இரவு 5-32 மணிக்கு சூரியன், சுக்கிரன், சனி இவர்கள் உச்சத்திலிருக்கப் பிறந்துவிட்டது! எது? குரோதன வருஷம்.

இந்தக் குரோதன வருடமானது, சூரியனை-அர்க்காதிபதி, சேனாதி..., மேகாதிபதியாகவும்; சந்திரனை-மந்திரியாகவும்; செவ்வாயை-தான்...தியாகவும்; புதனை-இராஜாவாகவும்; கிரஸாதிபதியாகவும், குரு

வை-சஸ்யாதிபதியாகவும்; சனியை-இரஸாதிபதியாகவும் நியமுகம் செய்து கொண்டு, சுக்கிரனுக்கு ஒரு ஸ்தானத்தையும் கொடாமலும் ஆடிமீ 20உ யில் பகல் 24-நாழிகை, 52-விநாடிக்குச் சந்திர கிரஹணம் பிடித்து (பௌர்ணமை கழிந்து பிரதமையில்) இராத்திரி 1-நாழிகை, 56-விநாடிக்கு கிரஹணம் விடும்படிக்கும், ஐப்பசி மாசத்தில் வரவேண்டிய நரக சதுர்த்தி தீபாவளி பண்டிகையைப் புரட்டாசி மாசத்தில் வரும்படிக்கும், தை மாசத்தில் யாவரும் விசேடமாய்க் கொண்டாடப்படும் "தை அமாவாசை" மார்கழி மாசத்தில் வரும்படிக்கும், தைமாசப் பிறப்பு "சங்கராந்தியில்" சூரிய கிரஹணம் அமாவாசையில் பிடித்துப் பிரதமையில் விடும்படிக்கும், மாசி மாசத்தில் வரவேண்டிய "மஹா சிவராத்திரி"யைத் தைமாசக் கடைசியில் வரும்படிக்கும் திட்டம் செய்துகொண்டு வெகு உல்லாசமாக முறைபிறழ்வாய்க் கையேந்திக்கொண்டு, பாடாவரி நட்சத்திரத்தில் ஜனனமாயிற்று இந்தக் குரோதன வருஷம்:

சகோதர சகோதரிகளே! பார்த்தீர்களா!! "விளையும் பயிர் முளையிற் றெரியும்" என்பார்களே!!! நூதன விசேஷத் தன்மையுடன் பிறந்திருக்கிற இந்த வருடத்தின் பலனைக் கவனிப்போம்.

இவ்வருஷம் மஹாமேரு பர்வதத்திற்கு நைருதி திக்கில் வருணமேகம் உற்பத்தியாகப் போகிறது. மழை 24 படி. இதில் சமுத்திரத்தில் பாதியும், 5-ல் 1½ பாகம் மலைகளிலும், 5-ல் 1 பாகம் பூமியிலும் காற்றுடன் கலந்த மழை எங்கும் அற்பமாய் வருஷிக்கும். இதனால் முந்தின பயிர் மத்திபமும், பிந்தின பயிர் நல்ல விளைவுமாகும். பயிர்களுக்குப் புழு வெட்டு, பூச்சிவெட்டுகளதிகப்படும். இராஜாக்களுக்குள்ளும், ஜனங்களுக்குள்ளும் கோபிகளுண்டாவார்கள். அரசர்களுக்குள் நீதியுடன் கலகமேற்படும்.

இந்த குரோதன வருஷமானது இரக்தாக்ஷி வருடக் கடைசி நாளிரவில் பிறந்திருப்பதால் பூமி சுபிக்ஷம்தான். தங்கம், பச்சை முதலிய ரத்னங்கள் வெகுவாயுண்டாகும். கோதுமை, கரும்பு, கடலை, சம்பா, சிவப்புத் தானியங்கள் அதிக விளைவாம். எள்ளு, எண்ணெய், ஆமணக்கு முதலானவை விலையேற்றமாகும். வஸ்திராதி வியாபாரத்தில் நஷ்டமாகும். உத்தராயணத்தில் சந்திரகிரஹணமும், தக்ஷிணாயனத்தில் சூரிய கிரஹணமும் வருவதால், சிந்து, காஸ்மீரம், சீனம், யவனம், காந்தாரம், காம்போஜம், குரு, விதேகதேசம், மத்தியதேசம் ஆகிய இத்தேசங்களில் அற்ப மழையும், கேடும் ஜனங்களுக்கேற்படும் பீடைகளில் வடதேசத்தார்களுக்கு விசேஷ பீடையும் உண்டாகும்.

விக்கிரமாதித்தன் காலம் முடிந்து 1981 வருஷமும், போஜராஜன் காலம் முடிந்து 1777 வருஷமும், முகம்மது நபியின் காலம் முடிந்து 134 வருஷமும் கடந்துவிட்டன.

நேயர்காள்!

மேனாட்டு நாகரிகத்தினால் நம் தாய்நாடு வரவரச் சீர்குலைந்து வருகிற சங்கதி உங்களில் யாவருக்கும் பிரத்தியக்ஷமாய்த் தெரிந்திருக்கலாம். இவ் வருஷப்பிறப்பை நம்மவர்கள் கைக்கொண்டு பிதுர்தர்ப்பணாதி, விஷுபுண்ணிய கர்மாதிகளைச் செய்து நன்மை யடையுமாறு சாக்ஷாத் பகவானால் விதித்திருக்கிறதுபற்றி நம் க்ஷேமத்திற்கும், நம் தாய்நாட்டின் முன்னேற்றத்துக்கும், நன்மைக்கும் இன்றியமையாததாகப் பூரண அறிவைத் தெளிவித்து முத்திக்கு முயலக்கருதி உய்யும்பொருட்டு, விஷுபுண்ணிய கர்மாதிகளைச் செய்து நம் குழந்தைகளுக்குத் தாய் மொழியினைப்புகட்டித்தமிழ் வீரம் விளங்கச்செய்து வாழ்வினை மேன்மை யடையச்செய்ய வேண்டியதும், நம் ஆனந்தபோதினியை 11-வது வருட சந்தாவை முன் கூட்டியனுப்பி ஆதரித்து, அது புகட்டிவரும், அறிவைப் பின்பற்றி, அதன் அதிபரை உற்சாகப்படுத்த வேண்டியது அவசியமென்பதும், யாரும் மறுக்கார்.

இவ்வருடப் பலனை யாராய்வதில் அசுபதி, மிருகசீரிடம், ஆயில்யம், அஸ்தம், அனுஷம், உத்திராடம், பூரட்டாதி ஆகிய இவ்வேழு நட்சத்திரங்களில் ஜனித்தவர்களுக்கு 3 பாகம் வரவும், ஒரு பாகம் செலவும்; பரணி, உரோகணி, ஆதிரை, பூசம், மகம், உத்திரம், சித்திரை, விசாகம், கேட்டை, பூராடம், திருவோணம், சதையம், உத்திரட்டாதி ஆகிய இப்பதின் மூன்று நட்சத்திரங்களில் ஜனித்தவர்களுக்கு வரவும், செலவும் சமபாகமாகவும்; கார்த்திகை, புனர்பூசம், பூரம், ஸ்வாதி, மூலம், அவிட்டம், ரேவதி ஆகிய இவ்வேழு நட்சத்திரங்களில் ஜனித்தவர்களுக்கு ஒரு பாகம் வரவும், 3 பாகம் செலவுமாக இருக்கும்.

இவ்வருஷம் சித்திரை மாசமும், வைகாசிமீ 12உ வரையும் சுக்கிரன் உச்சமாகவும் சிலகாலம் ஆட்சியாகவு மிருந்தும் சுக்கிரனுக்கு அஸ்தமனமாகையால் வைகாசிமீ 12உ வரை விவாஹாதி சுப முகூர்த்தம் கூடாது.

இந்தக்குரோதன வருடத்தின் குணாதிசயங்களைப்பற்றி அட்சயவருட ஆரம்பத்தில் ஓர் நாவல் எழுதி உலகோருக்குத்தெரியச்செய்வாரெனச் சந்தேகங்கொண்டே குரோதன வருஷம் கெற்பத்துள் ளிருக்கும்போதே சென்னை புரசவாக்கத்திலிருந்த ஸ்ரீமான் ஆரணி-குப்புசாமி முதலியாரவர்களை, சென்ற 24-1-1925-ல் பரமபதத்துக்கு அனுப்பிவிட்டதுபற்றிப் பரிதாப மடைகின்றனம்.

கே. எஸ். முத்துகிருஷ்ண ரெட்டியார்,
பாலசோதிடம், மூலைக்கரைப்பட்டி, (திருநெல்வேலி.)

---

**சந்தாதாரர்களுக்கு.**—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாத மாதம் வரும் ...ிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் ...த்து குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

# நாலடியார் வசனம்

(345-ம் பக்கத் தொடர்ச்சி.)

## 17-ம் அதிகாரம்—பெரியாரைப் பிழையாமை.

(பெரியோர்களை அவமதியாதிருத்தல்.)

சப்திக்கும்படியான நீரருவிகள் பொருந்திய அழகிய மலைகளையுடைய நல்ல பாண்டிய நாட்டையுடையவனே! பொறுத்துக்கொள்வார்களென்று நினைத்து, குற்றம் நீங்கிய பெரியோர்களிடத்திலும் (அவர்கள்) வெறுக்கத்தகுந்த காரியங்களைச் செய்யாதிருத்தல்வேண்டும். (அவர்கள்) வெறுத்துவிட்டபின் (அவ்வெறுப்பினால் வரும் தீங்கை) நீக்குதல் யாவர்க்கு மருமையாம். (1)

நல்ல மேன்மையில்லாத அறிவுடையார், மிகுந்த திரவியத்தைக் கொடுத்தும் சிநேகிப்பதற்கரிய பெரியோரை சும்மா சிநேகிக்கப்பெற்றிருந்தாலும் (அவர்களாலடையவேண்டிய பயனை அடைந்துகொள்ளாமல்) ஐயோ! (தங்கள் காலத்தை) பிரயோசனமில்லாத காலமாகக் கழிப்பார்கள். (2)

இழிவாக மதித்தலும், மேன்மையாக மதித்தலும் என்னுமிவ்விரண்டும் மேன்மக்களால் மதிக்கத்தக்க தன்மையுடையன. நற்குண மில்லாதவர்களும் நல்லொழுக்க மில்லாதவர்களுமாகிய கீழ்மக்கள் அவமதித்தலையும் சிறப்பித்துப் புகழ்தலையும் தெளிந்தெடுத்த நூல்களைக் கற்ற பெரியோர்கள் ஒருபொருளாக மனத்திற்கொள்ளமாட்டார்கள். (3)

படம் விரிக்குந் தன்மையுள்ள ஒளிபொருந்திய பாம்பானது பூமியின் வெடிப்பிற்குள் இருந்தாலும், இடியினது கடுங்கோபமானது (சப்தமானது) ஆகாயத்திலிருந்தாலும் (அதற்குப்) பயப்படும். (அதுபோல) பெரியோர்கள் கோபித்தால், அருமையான பாதுகாப்பில் தாங்களிருந்தாலும் தப்பி உயிர் வாழமாட்டார்கள். (4)

'எம்மை நீர் அறிந்துகொள்ளவில்லை. எமக்குச் சமமானவர் ஒருவருமில்லை' என்று தம்மைத் தாமே உயர்த்திக்கொள்வது பெருமையாகாது. தம்மை எளியவர்களாக மதித்து, தருமமார்க்கமறிந்த பெரியோர்கள் (தம்மை) பெரியவர்களாக மதித்துக்கொள்வதே பெருமையுடையதாம். (5)

பெரிய கடலின் குளிர்ந்த கரையைச் சார்ந்துள்ள நாட்டையுடைய பாண்டியனே! சிறியவர்களுடைய சிநேகமானது காலை வெய்யிலின் நிழலைப்போல (போகப்போக) குறைந்துகொண்டே போகும். தொன்றுதொட்டு பரம்பரையாக வருகிற பெரியோர்களுடைய சிநேகமானது (அவ்வாறு) குறைவுபடுதலில்லாமல் சாயங்காலத்து நிழல்போல, வளர்ந்து வந்து செல்லும். (அதி-13. பா-5. அதி-14. பா-8. இவற்றின் கருத்தை ஞெடு ஒப்பிடுக.)

நெருங்கித் தளிர்த்துத் தழைத்திருக்கும் குளிர்ந்த மரங்களெல்லாம் தம்மிடம் வந்தவர்களுக்கு வேறுபாடில்லாமல் ஒரே தன்மையாக புகலிட மாவதுபோல, அரசர்களுடைய செல்வத்தையும் பெண்களுடைய அதிகரிக்கின்ற அழகின் நன்மையையும் இடைவிடாமல் சேர்ந்திருப்பவர்கள் அனுபவிப்பார்கள். (7)

பெரிய வற்றாத மிக்க (நீரையுடைய) கழிக்கரையையுடைய பாண்டியனே! ஆராய்ச்சி யறிவில்லாதவர்களிடத்திலும் சிநேகஞ் செய்துபார்க்க அவர்களது குணகுணந் தெரியும். அவர் சிநேகம் பிரிய, பெரிய துன்பமாகிய நோய் உண்டாகும். (ஆதலால்) யாரிடத்திலும் சிநேகியாமையே பல மடங்கு நல்லது. (8)

சொல்லப்புகுந்தால் நற்குண நற்செய்கைகளை உடையவரிடத்தில் நூலைக் கல்லாமல் கழிந்தநாளும், பெரியோர்களிடத்தில் போகாமல் கழிந்த நாளும், (தம்மால் கொடுக்கக்) கூடிய பொருள்களை (தம்மிடம் வந்து யாசிப்பவர்க்குக்) கொடாமல் கழிந்த நாளும் உண்டாகமாட்டா. (9)

பெரியோர்களுக்குப் பெருமையாவது பெருமை பாராட்டாமல் வணங்கியிருத்தல். (கல்வி முதலியவற்றில் யாதாயினும்) ஒன்றிற்கு உரிமையுடையவர்களுக்கு உரிய குணமாவது அடங்கியிருத்தல். ஆராயுமிடத்து, தன்னைச் சேர்ந்தவர்களின் துன்பத்தை நீக்குவார்களானால் செல்வரும் செல்வ முள்ளவர்களே. (10)

## 18-ம் அதிகாரம்—நல்லினஞ் சேர்தல்.

### (பெரியோர்களது சேர்க்கை.)

வெயிலானது அதிகரித்தலால் புல்லின்மேலிருக்கும் பனியின் பற்றானது நீங்கிவிடுவதுபோல, சிறுபிராயத்தில் அடக்கமில்லாதவர்களுடன் சேர்ந்து சன்மார்க்கமல்லாத பாபகாரியங்களைச் செய்து நடந்த குற்றங்களும் நல்ல மார்க்கமறிந்த நல்ல பெரியோர்களைச் சேர்தலால் கெட்டுவிடும்.

தரும மார்க்கத்தை அறியுங்கள். எமனுக்குப் பயப்படுங்கள். பிறர் (சொல்லும்) கொடுஞ் சொற்களைப் பொறுத்துக்கொள்ளுங்கள். வஞ்சம் (உம்மிடம் வராதபடி தடுத்துப்) பாதுகாத்துக்கொள்ளுங்கள். தீய செயல்களையுடையவர்களுடைய சிநேகத்தை வெறுத்துவிடுங்கள். எந்நாளும் பெரியோர்வாயிற்பிறக்கும் சொல்லைப் பெறுங்கள். (2)

(உறவினர் நண்பர் முதலிய) அடைந்தாரைப் பிரிதலாலும், (சகிப்பதற்கு) அருமையான நோய்களும் மரணமும் சரீரத்தைப் பெற்றவர்களுக்கு ...ங்கே உண்டாதலாலும், வினைத்தொடர்பால் வரும் பிறவியானது இனி...யைத் தராதது (துன்பத்தையே தருவது) என்று அறியும் பெரியோா... என் மனமானது உறுதியாகச் சேரக்கடவது. (3)

பிறவிகளுள் நற்குணமுடையவற்றைச் செய்யவேண்டுமென்னும் மனமுடைய நல்லோர்களுடனே எந்நாளும் சிநேகஞ்செய்து (பிரியாமல்) கூடி வாழப்பெற்றால் துன்பமுடையதாயிருந்தாலும் இப்பிறவியை யாரும் வெறுக்கமாட்டார்கள். (4)

ஊரிலுள்ள சலதாரை நீரானது மகிமைபொருந்திய (நதி குளம் முதலியவற்றின்) நீரைச் சேர்ந்தால் (அதன்) பெயரும் வேறுபட்டு தீர்த்தமாகும். (அதுபோல) குலப்பெருமை யில்லாதவர்களும் நல்ல பெருமையுள்ள நல்லவர்களைச் சேர்ந்து மலைபோல் உயர்ந்து நிற்பர். (மிக்க கௌரவமுடையவராவர், என்றபடி.) (5)

ஆகாயத்திலுள்ள விளக்கமாகிய கிரணங்களையுடைய பிரகாசமான சந்திரனைச் சேர்ந்திருத்தலால் (களங்கமாகிய) முயலும் (உலகத்தவரால்) வணங்கப்படுகிறது. (அதுபோல) சிறப்பில்லாதவர்களாயினும் மலைபோலுயர்ந்த பெருமையுடையவர்களுடைய சிநேகத்தைக்கொண்டால் சிறப்படைவார்கள். (சந்திரனது களங்கத்தை 'முயல்' என்பது மரபு.) (6)

பாலுடன் கலந்த நீரானது பாலாகக் காணப்படுவதே யல்லாமல் நீர்போல நிறம் தெளிந்து காணப்படாது. (அதுபோல) ஆராயுமிடத்தில் நல்ல பெரியோர்களுடைய பெருந்தன்மையைச் சேர்ந்த சிறியோருடைய இழிதன்மையும் தெரியாது. (7)

கொல்லைகளாகிய பெரிய வயல்களிலே (நடப்பட்டிருக்கும்) மரக்கட்டையைச் சேர்ந்துள்ள (பசும்) புற்கள், பயிரிடுவோர் உழுகிற கலப்பைக்கு அசையமாட்டா. (அதுபோல) வலிமையில்லாதவர்களானாலும் நல்ல சார்பைச் சார்ந்தவர்களிடத்து பகைவருடைய கோபங்கள் செல்லமாட்டா. (மெலியார் வலிய விரவலரை யஞ்சார்,வலியோர்தமைத் தாம் மருவில்-பலியேல்-கடவுளவிர் சடைமுன் கட்செவி யஞ்சாதே- படர்சிறைய புள்ளரசைப் பார்த்து. என்னும் செய்யுளின் கருத்தைக்கொண்டது இது. விரவலர்=பகைவர். கட்செவி=பாம்பு. புள்ளரசு=கருடன்.) (8)

கழனியின் நல்ல வளத்தால் வளர்ந்த நெல்லைப்போல (மனிதர்களும்) தாங்கள் சேர்கின்ற கூட்டத்தின் நன்மையால் பெரியோராவார். மரக்கலத்தின் வலிமையைக் கடுங்காற்றானது கெடுத்தலால் அம்மரக்கலம் கெடுதல்போல, பெரியோரது தன்மை தீய இனத்தைச் சேர்தலால் கெட்டுவிடும். (9)

வெட்டப்பட்ட மரச்செறிவில் தீப்பட்டால் அந்த வனத்திலுள்ள வாசனை வீசுகின்ற சந்தன மரமும், வேங்கை மரமும் கூடவெந்துபோகும். (அதுபோல) (ஒருவர் தம்) மனத்தால் குற்றமற்றவரானாலும் தாம் சேர்ந்த (கெட்ட) இனத்தால்இகழப்படுவார். (தொடரும்.) (10)

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

## பகவத்கீதை வசனம்.

(351-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஹே அர்ச்சுன ! எந்த ஆகாரம்வேகாததோ, இரசமற்றதோ, நீநாற்ற முற்றதோ, ஊசியதோ, எச்சிலோ, அசுசியோ, அது தாமதர்க்கே பிரிய முடையதாம்.

ஹே பார்த்த ! எவ்வாகாரம் பாதிவெந்ததாமோ, மிக வெந்துபோனதால் தீய்ந்து ருசியற்றதாமோ, எவ்வோதனாதி சமைத்து நெடும்போதானதால் தண்ணென்று குளிர்ந்ததாமோ, எதனது சாராம்சம் எடுக்கப் பெற்றதோ (மோர்முதலியவை), எது துர்க்கந்த முடையதாமோ, எது சமைத்து ஓரிரவு கழிந்தபின் உண்பவனுக்கு மயக்கத்தைத் தருவதாமோ, உண்ட உச்சிஷ்டமாமோ, அயோக்கிய அசுசிமாம்சாதிகளாமோ, அபத்தியமாமோ, இவையாவும் தாமதர்க்குப் பிரியமுடையனவாம். இத்தாமத ஆகாரத்தைச் சாத்துவிகர் அதிதூரத்திற் றள்ளவேண்டும். (இவ்வாகாரத்தில் துக்கம் சோகம் முதலியவற்றின் காரணத் தன்மை யாவர்க்குந் தெரிந்ததேயாதலின் பகவான் நேரேகூறியருளிலர். முறையாகச் சாத்விகத்தையும் இராஜசத்தையும் தாமதத்தையும் கூறியருளினர். பின்னிரண் டாகாரங்களில் முன்னதன் விரோதமே யுளதாம். மிகக்கைப்பாதிகள் மிகவுஞ் சுவையுடையன வாகாமையின் இரசிய (சாத்விக) விரோதியேயாம். பசையற்றது பசையுற்ற சாத்விக விரோதியேயாம்; மிகக்காழ்ப்பு மிகத்தகித்தலிரண்டும் தாதுவின் காப்பில் விரோதியாதலின் திரத்தன்மைவிரோதியாம்; மிக வெம்மையாதி மனமகிழ்ச்சி விரோதியாம். நோயைக்கொடுப்பது, ஆயுள், சத்துவம், பலம், ஆரோக்கியம், என்னும் நான்கன் விரோதியாம். துக்கசோகத்தைக் கொடுப்பது, சுகப்பிரீதி என்பவற்றிற்கு விரோதியாம். உரைத்தவண்ணம் இராஜசத்திற் சாத்விகவிரோதம்வெளிப்படையாம். இவ்வாறு தாமதத்திலும் இரசமற்றது, வேகாதது, பழையது ஆகிய மூன்றும், முறையே இரசமாயிருத்தல், பசையுடனிருத்தல், திரமிகத்தருதல் என்னும் மூன்றன் விரோதியாம்; துர்க்கந்த முடையது, எச்சிலாவது, அசுத்தமா யிருப்பது மூன்றும் மனமகிழ்வுற்றதன்விரோதிகளாம். தாமதத்தில் ஆயுள் சத்துவாதி விரோதம் யாவருக்குந் தெரிந்ததேயாம். இராஜசத்திலோ கேவலம் கண்கண்ட விரோதமேயாம். தாமதத்திலோ கண்கண்ட கண்காணா விரோத மிரண்டுமாம். இவ்விசேடங்களை யெல்லாம் நுண்ணியமதியினாலே ஆய்ந்து தெரிந்துகொள்ள வேண்டும்.

[ஆண்டு முன்மூன்று சுலோகங்களான் ஸ்ரீ பகவான் முறையாகச் சாத்விகாதி மூன்றாகாரத்தையும் மொழிந்தருளினர். இப்போது மூன்று சுலோகங்களால் முறையே சாத்விகாதி மூன்று யாகங்களைக் கூறிநாறுவர்.]

ஹே பாரத ! பலத்தில் ஆசையில்லாதவர் இந்தயாகம் இன்றியமையாதது
ஒயற்றத்தக்கது தான் என்று மனத்தில் துணிவையடைந்து சாஸ்

திரத்தில் விதித்த யாக அநுஷ்டானத்தைச் செய்வர்; அந்தயாகம் சாத்விகமெனப்பெறும்.

ஹே கௌந்தேய ! அக்கினி ஹோத்திரம், தரிச பூரணமாசம், சாதுர்மாசியம், ஜோதிஷ்டோமம், என்பதாதி யாகங்கள் இருவகையாம்; ஒன்றே காமியமாம், மற்றொன்றே நித்தியமாம். அவற்றுள், "தரிசபூரண மாசங்களால் சுவர்க்கம் வேண்டியவன் வேட்க," என்பதாதிவசனம், சுவர்க்கபலனைப்பற்றி விதித்ததாதலின் காமியமாம்; இதுவோ எல்லா அங்கங்களும் பூர்ணமான யாகத்தாலே அனுட்டிக்கத்தக்கதே அல்லாது பிரதிநிதிவாயிலாயன்றும். "சாங்காறும் எரியோம்புக" என்பதாதி வசனம் பயனைப்பற்றாமலே கேவலம் வாழ்தலாதி நிமித்தப்பற்றாலே கூறினமையின் நித்தியமாம்; சர்வ அங்கங்களும் நிறைவிலா தொழியவே பிரதிநிதிகளாலும் அநுஷ்டிக்கத்தக்கதாம் இது. சர்வாங்கசம்பூர்ண மிலதேனும் பிரதிநிதியைக் கவர்ந்து எனக்கு நித்தியகருமம் இன்றியமையாது செய்யத் தக்கதேயாம், பிரத்தியவாய நீக்கப்பொருட் டல்லவா ஸ்ரீ வேதபகவான் இன்றியமையாது வாழ்தலாதி நிமித்தத்தானே நித்தியகரும விதானஞ் செய்துளார் என்பதாகத் தன்மனத்தெண்ணி மனத்தூய்மையை வேண்டிக் காமியகரும அனுஷ்டான விருப்பற்றவராலே நூலளவைக்கொண்டு துணிந்தயாகமியாது அநுஷ்டிக்கப்படுமோ அது நூற்படி மனத்தூய்மையின் பொருட்டு அநுட்டிக்கத் தக்க நித்தியமாகிய சாத்விகமாம்.

ஹே பாரத ! மேலும், சொர்க்காதி பிரயோஜனத்தை யுத்தேசித்தும், இடம்பப்பொருட்டும், அனுஷ்டிக்கும் யாகம் இராஜசமென்றறிவாய்.

ஹே அர்ச்சுன ! ஜீவர்களின் ஆசைக்கு விஷயமாய சுவர்க்காதி பயனைக்குறித்து எந்தமகம் செய்யப்பெறுமோ, சித்த சுத்தியின் பொருட்டு யாது அனுஷ்டிக்கப் பெறாதோ, யாவரும் என்னைத் தருமாத்மா என்று புகழவேண்டும் என்றாசைவைத்து யாவருக்கும் தனது தருமான்மத் தன்மையை வெளிப்படுத்தல் இடம்பமாம்; இந்த டம்பப் பொருட்டும் எந்த யாகஞ்செய்யப்படுமோ, அது இராஜசமாம். ஒவ்வொரு யாகமோ இடம்பப்பொருட்டுச் செய்யாவிடினும் சுவர்க்காதி பயனைக்குறித்தே செய்யப்படும்; ஒவ்வொருமகமோ, சுவர்க்காதிகளை யுத்தேசியாமலே கேவலம் இடம்பப்பொருட்டே செய்யப்படும்; ஒவ்வொருமகமோ சொர்க்காதிபலப் பொருட்டும், இடம்பப் பொருட்டும் செய்யப்படும். இந்தப் பிரகாரம் திருஷ்ட அதிருஷ்ட திருஷ்டாதிருஷ்டப் பிரயோஜனத்தைக் குறித்து நூற்படி எந்தமகம் செய்யப்பெறுமோ அது இராஜசமாம். இந்த இராஜசத்தை விட்டுத் தொலைக்க வேண்டும். நீ பரதவம்சத்திற் பிறந்தவனாதலின் இராஜசகருமத்தை விட்டுவிடுதல் தகுதியேயாம்.

ஹே அர்ச்சுன ! நூல் விதியற்றதும், அன்னதான மற்றதும், மந்திரமற்றதும், தக்ஷிணையற்றதும், சிரத்தையில்லாததும், ஆகியயாகத்தை வேதமுணர்ந்த பெரியோர் தாமதயாக மென்பர்.

ஹே பற்குண! எந்தயாகம் விதியில்லாததோ எந்தச் சாஸ்திரத்தில் அந்தயாகம் விதித்திருக்கின்றதோ, அதற்கு மாறுயதாமோ, எம்மகத்தில் மறையவர் முதலானவர்க்கு அன்னதான மிலையோ, எந்தயாகம் உதாத்தாதி சுரங்களோடும் ககாராதி வர்ணங்களோடும் கூடிய மந்திரங்களற்றதாமோ, எந்தயாகம் தக்ஷிணையற்றதாமோ, இருத்துவிக்கு மறையவர் முதலியவரின் துவேஷாதியால் எந்தயாகஞ் சிரத்தையற்றதாமோ, அத்தகைய யாகத்தை வேதமறிந்த பெரியோர் தாமதயாகமென்பர். மேற்கூறிய விதியற்ற தன்மைமுதலிய ஐந்து விசேடங்களுள் ஒவ்வொரு விசேடத்தோடு கூடியும் ஒவ்வொரு வகையாக யாகம் ஐந்து வகையாம்; அவ்வைந்து சிறப்போடுங் கூடியதாக ஆறுவது வகையொன்றும். தனித்தனி இரண்டு, மூன்று, நான்கு விசேஷணங்களோடு கூடி யாகங்கள் அநேகவகையாம். முன்மொழிந்த இராஜசயாகத்தில் சித்தசுத்தியி னபாவமுளதேனும், சொர்க்கம் முதலிய பயன்களை யடையச்செய்யும் தருமமாகிய அபூர்வம் அவசியம் உண்டாம்; ஏனெனின் அந்தயாகம் சாஸ்திரத்தை யனுசரித்தே செய்யப்படுவதாதலின்; இம்மகமோ எவ்வபூர்வத்தையும் உண்டாக்காதாம். கூறிய இரண்டினுள்ளும் இதுவே வேற்றுமையா மென்றறிந்துகொள்க.

[இம்மூன்று சுலோகங்களாலே ஸ்ரீ பகவான் முறையே சாத்துவிகாதி மூவகை யாகங் கூறியருளினர்; இனிச் சாத்துவிகாதி மூவகையான தவத்தைக் கூறியருளும் பொருட்டு முதலில் மூன்று சுலோகங்களாலே முறையே காயிக, வாசிக, மானத, பேதத்தாலே மூன்று வகையாகத் தவத்தைக் கூறியருளுகின்றார்.]

ஹே அர்ச்சுன! தேவர், துவிஜர், ஆசிரியர், அறிஞர், இவரியாவரையும் பூசித்தல் காயத்தூய்மை; ஆர்ஜவம், பிரஹ்மசரியம், அஹிம்சை என்னுமிவையாவும் காயத்தவமாம்.

ஹே பார்த்த! பிரஹ்மா, விஷ்ணு, சிவன், சூரியன், அக்கினி, துர்க்கை, கணபதி, என்பவர் தேவர்; நன்னடக்கையோடு கூடிய உத்தம மறையோர்துவிஜர்; தந்தைதாய் ஆசிரியர் என்னும் விருத்தர் ஆசிரியர்; வேதபாடப் பொருளையறிபவர் அறிஞர்; இத்தகையவர்கட்கு சாஸ்திர விதிப்பிரகாரம் சிரத்தைபக்திகளுடன் தகுதிப்படி நமஸ்காரம் சேவை தக்ஷிணை அன்னதானம் என்பதாதியைச் செய்தலே இவர்தம் பூசையாம். தண்ணீரும் மண்ணுங்கொண்டு காயமேவிய மலங்கழுவுதல் சௌசமாம். ஆர்ஜவமோ மனக்கோணலின்மைவடிவமென இனி ஸ்ரீபகவான், மானத தவத்திற் கூறியருளுவராதலின் இவ்விடத்தில் அதைக்கொள்ளற்க;மற்றோ, நூல்விதித்ததில் முயலுதலும் நிடேதித்ததில் நீங்குதலும் ஆகியபிரவிருத்தியே ஆர்ஜவமெனக் கொள்க. சாத்திரநிடேத மைதுனத்தினின்றும் நீங்கல் பிரஹ்ம சரியமாம்; சாத்திரநிடேதமாகிய பிராணிகட்குப் பீடைசெய்த ன்மை அகிம்சையாம்; இதனோடு கள்ளாமை கொள்ளாமையுங்கொள்க. வபூசையே முதலியவை யெல்லாம் காயத்தவமாம்; காயமுக்கியமாயிருக்

குங்கருத்தா முதலியோரால் செய்யப்படுந்தவம் காயிகமாம்; கேவலங்காய மாத்திரையானே செய்யுந்தவம் காயிகமன்றாம்.

(தொடரும்.) நீடன்.

---

# ஆரிய சித்தாந்தம்.

## (சத்தியம்.)

(348-ம் பக்கத் தொடர்ச்சி.)

முன்னர்க்கூறிய மஹா சக்தியானது வருஷம், மாசம், நாள், நாழிகை, விநாடி, தற்பரை, விதற்பரை முதலிய கண்டிதமான காலவரையி லடங்காமல் என்றும் ஒரே படியாய் நிறைதலும், குறைதலும், விரிதலும், சுருங்கலும், ஏற்றமும், தாழ்வுமின்றி எவ்விடத்தும் எப்பொருளிலும் நிறைந்து நின்று ஜீவான்மாக்கள் செய்கிற இருவகைக் கன்மங்களுக்கும் சாட்சிமாத்திரமாயிருந்து அவ்வக்கர்மபலனை அவ்வவற்றுக்குப் பரிபாக முதிர்ச்சியிற் கொடுத்து உபகரித்து வருவதாதலால் இதற்கு வேதம் "சத்தியம்" என்று பேரிட்டது. பரம்பொருளை நிரூபிக்குமிடத்து வேதம் ஓம், ருதம், சத்தியம், பரம், பிரம்மம், புருஷம், தத், சத்து, சிவம் என்கிற திருநாமங்களைக் கொண்டே நிரூபிக்கின்றது. ஆதலால் பரபிரமத்துக்கு இவையெல்லாம் பரியாய நாமங்கள் என்று கண்டுகொள்ளலாம். நித்தியம் என்கிற பேரும் உண்டு. இவற்றுள் ருதம், சத்தியம், நித்தியம் என்பன ஒரு பொருளன. எவ்வாற்றானும் எவற்றானும் பேதிக்கப்படாததாய்த் தன்னிலை கெடாமல் தன்னொளியால் விளங்கி நிற்பதனால் இப்பெயர்கள் கூறப்பட்டன. இதனால் எவனாவதொருவன் தனக்குத் தெரிந்ததை நிச்சயமாய்த் தவறாமல் சொல்லும்போது "சத்தியமாய்ச்" சொல்லுகிறேன் என்பன். நான் சொல்வது உண்மை யென்று நிச்சயிப்பதற்காகச் சத்தியப்பொருளைச் சாட்சியிட்டுக் கூறுவதாகும். இவ்வாறு சத்தியம் செய்து ஒருவன் கூறுவது பொய்யாயிருந்தால் உலகம் அவனை நிந்திக்கும். இழிந்தவனாகக் கருதும். இது மிகவும் மானங்கெட்ட செய்கையாதலால் நல்லோர்கள் சத்தியம் செய்ய அஞ்சுவார்கள். இதனால் உண்மை பேசுவதே சத்தியமாமென்பது விளங்கும். இந்தச் சொல்லை இழிந்த விஷயங்களில் உபயோகிக்கக்கூடாது.

இந்தச் சத்தியம் காலதேசங்களுக்குத் தக்கபடி வேறுபட்டிருக்கும். அவ்வாறு வேறுபடுவது அவர்கள் கண்ட பிரமலட்சணங்களைப்பற்றியதாதலால் அது குற்றமாகாது. அங்ஙனங் கொள்ளாக்கால் பூலோகத்தில் சத்தியவான் ஒருவனும் இரான். ஏனென்றால் ஒருவன் ஒரு விஷயத்தை நன்றாய் அறிந்திருக்கிறான். அதைக்குறித்து அவனைக் கேட்கும்போது யாது காரணம்பற்றியோ எனக்குத் தெரியாது என்கிறான். மற்றொருவன் தான் அறிந்ததை உள்ளபடி கூறினால் பிறனுக்குப் பெரிய தீமை நேரிடுமெனக் கருதி மறைத்துச் சொல்கிறான். இவைகளெல்லாம் பொய்யென்றுதான் கொள்ளப்படும். இவைபோன்ற பல விஷயங்களுள. ஆயினும் காலதே

வர்த்தமானங்களால் அவைகளைச் சத்தியமென்றும் அசத்தியமென்றும் கொள்ளவேண்டும். பொதுவாக யாதொரு பயனும் இல்லாமல் உண்மையை மறைப்பதும், பொய் கூறுவதும், பிறருக்குத் தீமையுண்டாக்கும் நோக்கத்தைக்கொண்டு இல்லாதவற்றைக் கூறுவதும், நல்லோர்கள் இடத்தில் இல்லாத பழியைக் கற்பித்துக் கூறுவதும், தான் ஒரு நன்மையை அடையும்பொருட்டு இல்லாததைக்கூறுவதும் அசத்தியமேயாகும். பிறருக்குத் தீங்கில்லாதபடி கூறுவது சத்தியமாகும்.

இதனைத் திருவள்ளுவர், வாய்மையென்றும், இதன் மறுதலையைப் பொய்ம்மை யென்றுங் கூறுவர். வாய்மை, மெய்ம்மை, உண்மை என்பன ஒரு பொருட்கிளவிகள்.

"வாய்மை யெனப் படுவதியாதெனின் யாதொன்றுந், தீமையிலாத சொலல்" என்று மெய்ம்மையாகிய சத்தியத்திற்கு இலக்கணங் கூறினர். வேறொரு சீவான்மாவுக்கு ஒரு கெடுதியும் உண்டாகாதபடி பேசுவதே வாய்மையாம் என்பது. பிறருக்குத் தீமை பயப்பது நடந்ததாயினும் அது கூறுவது மெய்ம்மையாகாதென்பது விளங்கக்கூறியது. ஆதலால் நமது பெரியோர் கொண்ட கொள்கை பிற ஜீவனுக்குத் தீமையுண்டாகாமையே சத்தியமாம் என்பது.

"பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்"

என்றது அதனை விளக்கவெழுந்தது. என்னெனின், பிறருக்குக் குற்றமில்லாத நன்மையை யுண்டாக்குமாயின் அதுபற்றிக் கூறும் பொய்ம்மையும் வாய்மையென்று கொள்ளப்படும் என்பதாம். இவற்றால் நடந்தது கூறுவதுதான்சத்தியம் என்பதும், இல்லாதது கூறுவதுபொய்ம்மை என்பதும் விலக்கப்பட்டன. பிறஜீவனுக்கு நன்மையுண்டாகக் கூறுவனவெல்லாம் மெய்ம்மை. தீமையுண்டாகக் கூறுவனவெல்லாம் பொய்ம்மையேயாம் என்பது நமது முன்னோர்களின் கொள்கையாம் என்று கொள்ளவேண்டும். அங்ஙனமாயின் உண்மையே மெய்ம்மையென்றும், இன்மையேபொய்ம்மை என்றும் கூறும் நூல்களொடு மாறுபடுமே எனின், பொருந்தும். ஆயினும் ஈண்டாராயற்பாலதிது.

ஜீவான்மாக்கள் இகம், பரம் என்ற இருவகைப் பயன்களை அடைவதற்குரியன. அவற்றுள் பொருள் இன்பம் என்பன இகத்துக்கேயுரியன. இகம் என்பது இவ்வுலகவாழ்வு. பரம் என்பது மறு உலக வாழ்வு. அதற்கு அறமும் வீடும் பயனும். அறம் பரலோக வாழ்வுக் குரியதாயினும் உலகங் கடந்த பேரின்பமான மோட்சமும் மறு உலக வாழ்வின் கண்ணுவது யாண்டையதெனின், வீடு என்பது பரிபாகத்துக்கு ஏற்றவாறு பதமுத்தி, சாயுஜ்யமுத்தி என இருவகைப்படும். பரமுத்தி யென்பது மறுமை உலகம்; எல்லாவற்றினும் சிறந்ததாய்ச் சகுணப் பரம்பொருள் வாழும் உலகமாம். அது

மீளா உலகமாம். அவ்வுலகத்தை யடைவதற்கு அறமும் ஒரு சாதனமாவது பற்றிக் கூறியதாம். இகவாழ்வையே பொருளெனக் கொண்டு நடப்பவர் நடந்ததை நடந்தபடி கூறுவதே மெய். நடவாதது கூறுவது பொய்யாம். காமம் பொருள் என்பனபற்றி நிகழும் விவகாரம் அரசராலும் பிறராலும் தீர்க்கப்படும்போது அதுபற்றி நிகழ்ந்ததைக் கூறுவதே மெய். அது கூறுக்கால் பொருளிழந்தானுக்குத் தீமை விளையுமாதலால் அது பாவமாய் நரக துன்பத்தையே தரும். ஆதலால் அவர்கள் நிகழ்ந்ததையே கூற வேண்டும்.

பரம் ஒன்றையே கருதி இகவாழ்வை வெறுத்துத் தெய்வசிந்தனையி லிருந்து தவம் புரிவார் எல்லாவற்றையும் சமனாகக் கருதவேண்டும். அங் ஙனம் கருதுங்கால் ஜீவான்மாக்களின் துன்ப நிவர்த்தியே அவர்களுக்குப் பெரிய புண்ணியமாம். அவர்கள் கூறுவது பட்சபாதகம்பற்றி யன்றாத லால் அது பொய்யின்பாற்படாது. மெய்யின் பயனையே தரும். இப் பொருள்கள் ஸ்மிருதிகளின் கருத்தைத் தழுவியன. விருப்பும் வெறுப்பு மின்றி ஜீவான்மாக்களிடத்திலுள்ள கருணையினாற் சொல்லப்படுவது ஆத லால் பாவமாவதில்லை. இதுபற்றியே,

"அருளிலார்க் கவ்வுலகமில்லை பொருளிலார்க்
கிவ்வுலக மில்லா தியாங்கு"

என்று கூறினார். இந்த உலக வாழ்வுக்குப் பொருளே சிறந்தது. அது இல்லாவிடில் உலக இன்பத்தை அனுபவிக்க வியலாது. அதுபோலக் கருணை யென்னும் அருளிலாக்கால் மறுமையின்பந் துய்த்தலில்லையாம். பொருளில்லாமையே இவ்வுலகத்தில் துன்பமாதலால் அதுபற்றி நிகழ்ந்த தையே கூறவேண்டும். மறுமையை வேட்டவர்கட்கு உலகநெறி அவசிய மில்லையாதலால் அவர்கள் அருளையே முக்கிய சாதனமாகக்கொண்டு தவம் புரிதல்வேண்டும். அங்ஙன மொழுகுவார்க்கு ஜீவான்மாக்களின் துன்ப நிவர்த்தியே பேரின்ப மளிக்குமாதலால் அவர்கள் கருணைபற்றிக் கூறும் பொய்ம்மையும் மெய்ம்மையின்பாற்படுவதாம் என்றருளினார். இதனால் அரு ணெறிப்பட்டார் கருணை காரணமாக நிகழ்ந்தது கூறாது மாறுபடக் கூறி னும் அதுவழுவாகாது. ஆதலால் நிகழ்ந்தது கூறுவதே மெய்ம்மையென்று கூறும் நூல்களின் கூற்றொடு மாறுபடுவதில்லை யென்று கொள்க. மாறு படாததாகவே அது வாய்மை யென்பது தெளியப்பெறும். இவையெல் லாம் ஒவ்வொரு நெறிபற்றிக் குற்றமாகாவாயினும் சத்தியம் என்பது உண் மைகூறுதலையே உணர்த்தும். இதனை யுணர்த்துதற்கே,

"தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்"

என்றார். இதன்படி ஒருவன் தன் மனதினால் நன்றாக அறிந்திருக்கிற விஷயத்தை மறைத்துப் பொய் சொல்லக்கூடாது. சொன்னால் பிர

தன் மனமே தன்னை நெருப்புபோலக் கொளுத்தும். பிறர் அறியாரென்று கருதி உண்மையை மறைத்துப் பொய் கூறினால் அவன் நெஞ்சில் வசிக்கின்ற சத்தியப்பொருளே உண்மையை வெளிப்படுத்திவிடும். வெளிப்படுமாயின் உலகத்தார் அவனை மதியார். பொய்யனென்று இகழ்ந்து நிந்திப்பார்கள். அப்பொழுது அவன், தான் பொய் பேசினதற்காக வருந்தித் தன்னைத் தானே நிந்தித்துக்கொண்டு துக்கிப்பான். இராஜாதியரும் பிறரும் அவன் சொல்லில் நம்பிக்கை கொள்ளமாட்டார்கள். இவைகளால் பல தீமைகள் நேரிடுவதற் கிடமுண்டாகையால் "தன்னெஞ்சே தன்னைச் சுடும்" என்றார்.

"உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லா முளன்"

என்றதனால் மனமறியப் பொய் கூறாமல் தான் அறிந்ததை யறிந்தபடி கூறுபவன் அடையும் பயன் கூறியதாயிற்று. ஒருவன் தன் மனமறியப் பொய் சொல்லாது உண்மையையே கூறுவானாயின் அவனை யெல்லாரும் தம் உள்ளத்தாற் புகழ்வார்கள். பொய் கூறாமை மேலான அறமாதலால் அந்த அறவுருவனாகிய இறைவன் எல்லார் உள்ளமும் ஒத்து அவனைப் புகழும்படி செய்வன். அவனுடைய வார்த்தைக்கு எங்கும் மதிப்புண்டு. செல்வாக்குமுண்டாகும். அரசர்களும் சன்மானிப்பார்கள். இது பொருளின்பங்களையே பெரிதெனக் கொண்டொழுகுவார் கைக்கொள்ளவேண்டிய முறைமையாம். இதுவே உலகத்தார் மெய்யென்றும் கூறுவது. உலகங் கடந்த துறவிகளாகிய ஞானிகளுக்கு இந்நெறி அவசியமின்று. சர்வ ஜீவாத்மாக்களுக்கும் ஆதாரமாயும் கர்மசாட்சியாயும் நிற்கும் இறைவன் இவன் பாபியென்றும் இவன் புண்ணியவான் என்றும் வேறுபாடு கருதாமல் இருவரையும் ஒப்பக்கருதி அவரவர்களுக்குத் தக்கவாறு அநுக்கிரகம் செய்துவருவது நிச்சயம். அதுவே கருணையென்று புகழ்ந்து கூறப்படுவது. அவனையே பொருளாகக் கருதி உலக பாசத்தைப் பற்றற ஒழித்திருக்கும் ஞானயோகியரும் அந்தக் குணத்தையே சிறப்பாகப் பெறவேண்டியவர்கள். அவர்கள் ஒழுகும் நெறி ஞானநெறி. அந்த நெறியில் உலக விவகாரங்கள் வந்து குறுக்கிடுவதில்லை. உலகநெறியை அனுசரிப்பதே பெரிய பாபமாய் வீட்டு நெறியை அடைக்கும். ஆதல்பற்றி அவர்கள் வீட்டுக்குரிய கருணையையே பெரிதாகக்கொண்டு எவ்வாற்றானும் ஜீவ இம்சை நேரிடாமல் நடக்கவேண்டும். இதனை விளக்குவதற்கு அர்த்தவாதமாக இதிகாசங்கூறிய ஒரு சிறிய சரித்திரத்தையும் இங்கு எழுதுகிறோம்:

ஒரு காட்டில் ஒரு முனிவர் உக்கிரமான தவஞ் செய்துகொண்டிருந்தார். ஒருநாள் ஒரு வேடன் ஒரு ஆட்டை அறுப்பதற்காகக் கொண்டு வந்து அம்முனிவர் தவச்சாலைக்குச் சமீபத்தில் நின்றான். ஆடறுக்கும் கத்தியை வீட்டில் வைத்து மறந்துவிட்டான். கத்தியை எடுக்கும்பொருட்டு வீட்டிற்குச் சென்றான். அந்த ஆட்டை ஊணுங்கொடியால் ஒரு மரத்

தில் கட்டிவிட்டுச் சென்று கத்தியை எடுத்துக்கொண்டுவந்து பார்த்தான். ஆட்டைக் காணேம். நாலா பக்கத்திலுந் தேடினுன். எங்கும் காண வில்லை. அந்த முனிவரிடத்தில் வந்து கேட்டான். அப்பொழுது அம் முனிவர், சந்தியாவந்தனம் செய்துகொண்டிருந்தவர், கையில் தண்ணீரை எடுத்துக்கொண்டு தலையைப் பிரதட்சிணமாகச் சுற்றிஞர். வேடன் தென் முகமாய்க் கையைக் காட்டுகிருர் என்று தெற்கே தேடிக்கொண்டுபோய் ஆட்டைக் கண்டுபிடித்துக் கொண்டுவந்து வெட்டிவிட்டான். சிறிதுகாலத் துக்குள் முனிவர் தேகவியோகமாயினுர். ஒரு ஆடாக ஜனித்தார். வெட்டுப் பட்ட ஆடு வேடமனிதனுகப் பிறந்தது. அம்மனிதன் முனிவரை வெட்ட வந்தான். அதைக்கண்ட முனிவர் இந்த ஆச்சரியத்தைப் பார்த்துக் கடகட வென்று சிரித்தார். வேடன், ஆடே! நீ என் சிரிக்கிருயென்று கேட்க ஆடு, "முன்ஜன்மத்தில் மனிதனுகப்பிறந்து பெருந்தவம் செய்துகொண்டிருந் தேன். நீ ஆடாக இருந்தாய். உன்னை வெட்டவந்த வேடன் உன்னைத்தேடித் திரிகையில் என்னிடம் வந்து ஆடு எம்மார்க்கமாய்ச் சென்றதென்று கேட் டான். நான் மௌனச் சந்தியாவந்தனம் செய்யும்போது ஜலத்திஞல் தலை யைச் சுற்றினேன். வேடன் என்கை சென்றவழியே சென்று உன்னைப்பிடி த்து வெட்டிவிட்டான். அந்தப் பாவத்துக்காக நான் ஆடாய்ப் பிறந்தேன். நீ மனிதனுய்ப் பிறந்து பழிக்குப்பழி வாங்குகிருய். நான் ஒரு பாபத்தை யும் அறியாமல் இருந்தும் இந்தக்கதியை அடைந்தேன். ஞானதிருஷ்டி யாலதை யறிந்து சிரித்தேன். நீ என்னை வெட்டிவிட்டு நன்னெறிபற்றி நடந்து நற்கதியை அடை"யென்று கூறிஞர். வேடனும் அவ்வாறே வெட் டிவிட்டு நன்னெறி ஒழுகி நற்கதியடைந்தான். ஆதலால் உலகநெறி வேறு, வீட்டு நெறி வேறு என்று கொள்க. (தொடரும்.)

**சீவானந்தசாகர யோகீஸ்வரர்.**

---

## ஓர் ஐயவினு.

**நல்லருளாளுஞ் செந்தமிழ்ச் செல்வர்காள் !**

எண்ணுல் வந்தபெண்பாலொருமைப் பெயர்க்கு ஒருத்தியென்றல்லாது, ஒருவள் என்று நம்புலவர் பெருமக்களால் பாடிய பிரபந்தம் புராணமாதிய நூற்செய்யுட்களில் எங்கேனும் பிரயோகமிருக்கின்றதா ? இருப்பின் அச் செய்யுட்களீவையென்று, அருள் நிறைந்தாருயிர்க்கிரங்கித் துயர்கடிகொள் கைவாய்ந்த நம் ஆனந்தபோதினியின் வாயிலாக அறிவித்தருளுமாறு வேண்டுகின்றேன். வே. ரா. தெய்வசிகாமணி, எ. வேலம்பாளையம்.

---

## தமிழ் !

அன்பர்களே ! இத்தலைப்பின் கீழ் தொன்மை, சிறப்பு, நிலைமை முத லிய பல்வேறு பிரிவுகளைப்பற்றி வரையலாகும். ஆனுல் நாம் இப்பொழுது இதன் நிகழ்கால நிலைமையைப்பற்றி மட்டுமே கூற விரும்புகிறேம். எனெ

னில், இது நமது புது வருட மகிழ்ச்சியை அறிவித்துக்கொள்ளவும், தமிழ் அன்பர்களுக்கு ஓர் புதிய ஊக்கத்தை யளிக்கவும் உதவியாயிருக்குமெனக் கருதுகிறோம்.

1.........................................................................................

2...........................

3.......................................................

மேலேகுறிப்பிட்ட மூன்று வரிகளையும் நன்றாய்க் கவனியுங்கள். முதல் வரி, நமது அருந்தமிழின் பண்டைக்காலத்திய அரசாட்சியை விளக்குவதாகும். இரண்டாம் வரி, சிறிது காலத்திற்கு முன்பு நம் தமிழ் இருந்த தாழ்ந்த நிலையை அறிவிக்கிறது. மூன்றாம் வரி, நம் அரும்பெருந் தமிழின் நிகழ்கால நிலைமையை நன்கு அறிவிக்கின்றது. இதனால், நம் தாய்மொழியானது சிறிது காலத்திற்கு முன்பு இருந்த துக்ககரமான சீர்கேட்டிலிருந்து விலகி, பண்டைக்காலத்திய சிறப்பை யெய்தற்கு வெகு விரைவாகச் சென்றுகொண்டிருப்பதை ஒருவாறு அறியலாகும். எவ்விதமெனில் கூறுகிறோம் :—

1. நம் தமிழ்நாட்டில் பல தமிழ்ப் பத்திரிகைகள் மாதப் பதிப்பு, மாதம் இருமுறை, வாரம் ஒரு முறை, வாரம் மும்முறை, தினப்பதிப்புக்களாக வெளிவந்து தமிழ் மக்களின் முன்னேற்றத்திற்கான பல அரிய செயல்களை யறிவித்துத் தமிழுலகை மகிழ்விக்கின்றன.

2. தென்னிந்தியா முழுவதும், மிகச் சிறிய கிராமங்களிலுங்கூட அறிஞர் தமிழ்ச் சங்கங்களை நிறுவி வெகு தூரங்களிலுள்ள தமிழாசிரியர்களை வரவழைத்து அருமையான சொற்பொழிவுகளை நிகழ்த்துவித்து மக்களின் அறிவை வளர்த்து வருகிறார்கள்.

3. உயர்தரப் பாடசாலைகளிலும், கல்லூரிகளிலும் உள்ள மாணவர்கள், இக்காலத்தில் தமிழ் ஆசிரியர்களைப் பெருமைப் படுத்துகிறார்கள். தமிழ்ப் பாடம் நடைபெறும்பொழுது வெளியிற் போகிற வழக்கத்தை அடியோடு ஒழித்துவிட்டார்கள்.

4. பிறமொழிக் கலப்பில்லாமல் இரண்டொரு வார்த்தைகள்கூடத் தமிழில் பேசமுடியாதிருந்த மாணவர்கள், இப்பொழுது 'தமிழே மொழிய வேண்டு' மென்ற உறுதிப்பாடுடையவர்களாய் ''மாணவர் தமிழ்ச் சங்கம்'' பல வூர்களில் நிறுவித் தனித் தமிழிற் பழகுகிறார்கள்.

5. துரைத்தனத் தொழிலாளர்களிற் பலர் 'A. G. பாலன்', 'என். யம். வாசன்', 'யம். எஸ். பந்தன்' எனக் கையெழுத்துச் செய்துவந்தார்கள். இக்காலத்தில் தங்களின் மானக்கேடான செய்கையை யுணர்ந்து 'ஆ. கோபாலன்', 'ந. மாணிக்கவாசகன்', 'மா. சம்பந்தன்' எனக் கையெழுத்திடுவதோடு மற்றவர்களையும் அவ்விதமே நடக்க வற்புறுத்தி வருகிறார்கள்.

6. பல்கலை இளைஞர் (B. A.) முதலிய உயர்தரமாணவர்களுங்கூட தமிழைக் கட்டாயமாகக் கற்கவேண்டுமென ஒரு சட்டம் நிறைவேறியும், நிறைவேறாமலு மிருக்கிறது. விரைவில் அது வழக்கத்திற்கு வந்துவிடு மென்று எங்கணும் பேரவாவுடன் எதிர்பார்க்கப்படுகிறது.

7. பல கூட்டுறவுச் சங்கங்களி லெல்லாம் "தமிழிலேயே யாவும் நடைபெறவேண்டும்" என்ற முயற்சியை யெடுத்துப் பலர் வெற்றியடைந் துவிட்டார்கள். அச்சங்கங்களிலிருந்து வெளிவருகிற அறிக்கைகளெல்லாம் பிறமொழிக் கலப்பின்றித் தனித் தமிழிலேயே வெளிவருகின்றன.

8. வியாபாரிகளிற் பலர், மேல்நாட்டு நாகரிக மயக்கத்தி லாழ்ந்து தங்களின் தமிழ்ப் பெயர்களின் இறுதியில் 'அன்கோ' 'அன்சன்ஸ்' 'அன் பிரதர்ஸ்' என்ற ஆங்கிலப் பதங்களை வைத்து வியாபாரம் நடத்தி உன்னத நிலையிலிருப்பதாகக் கருதி யிருந்தார்கள். பாவம்! இவர்களிற் பலருக்கு இப் பதங்களின் பொருளே இன்னதெனத் தெரியாது. சிலருக்கு இவ்விலாசங் களுக்குப் பொருத்தமாகக் குழந்தைகளோ, கூட்டாளிகளோ, உடன்பிறப் பாளர்களோ இல்லாமலுமிருப்பார்கள் இத்தகைய நிலையிலிருந்த வியா பாரிகள் இப்பொழுது திருந்திவருகிறார்கள். சென்னையில் "M. R. S. Mudali & Co., எம். ஆர். எஸ். முடலி அன் கோ" என்ற பெயரால் தொழிலை நடத்திவந்த ஒருவர், "மு. இராமசாமி முதலியார்" என்ற தமது அழகிய பெயரால் தொழிலை நடததிவருகிறார். அவர் ஆங்கில மொழியில் மிக்க திறமையுடையவராயிருந்தும், தமிழர்களுக்கெல்லாம் தாய்மொழியி லேயே நிருபப் போக்குவரவுகளை நடத்துகிறார். இவ்விதம் வியாபாரிகளுங் கூட தம்முடைய பிறர் இகழ்ச்சி செய்தற்குரிய நிலையையறிந்து, வெட்கி, அதனினின்றும் விலகிவருவது நம் தமிழ்நாடு செய்த பெருந் தவப்பயனே யாகும்.

9. திருச்சிராப்பள்ளியில், வித்துவான் அ. சுந்தரநாத பிள்ளையவர்கள் "திருநெறித் தமிழ்க் கழகம்" என்ற ஓர் இலவசப் பள்ளியை நிறுவியிருப் பதும், திரு உ. க. பஞ்சரத்தனம் பிள்ளையவர்கள் 'தமிழர்' என்ற பெயரால் பத்திரிகையை நடத்துவதும், பிஷப் ஹீபர் உயர்தரக் கலாசாலைத் தலைமை யாசிரியரும் நகராட்சிக் கழகத்தின் உறுப்பினருமாகிய திருவாளர் தேவ சிகாமணி அவர்கள் இவ்வூரில் "தமிழ் பல்கலைக்கழகம்" ஒன்று ஏற்படுத் தப் பெருமுயற்சி யெடுத்துவருவதும், தமிழர்களாகிய நம்மை இப்புது வரு டத்தில் மகிழ்வடையச் செய்கின்றன.

அன்பர்களே! நம் இனிய தாய்மொழி இவ்வளவேனும் சிறப்புற்றமை க்கு, உடலை வருத்திப் பேருதவி செய்து இனியும் செய்துவருகிற பெரி யார்களிற் சிலரைத் தெரிவிக்க விரும்புகிறோம். அவர்களாவார்:—

உயர்திரு-திருக்கோவலூர் ஞானியார் சுவாமிகள்
திருவாளர்-பா. வே. மாணிக்கம் நாயக்கர் அவர்கள்
" சுவாமி வேதாசலம் அவர்கள்

திருவாளர்-பவானந்தம் பிள்ளையவர்கள்
,, ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள்
,, மு. கதிரேசஞ் செட்டியாரவர்கள்
,, சொ. சதாசிவச் செட்டியாரவர்கள்

முதலியவர்களும் இன்னும் பல பெரியார்களு மாவார்கள். இவர்களன்றி திரு-சி. சுப்பிரமணிய பாரதியாரவர்களும், ஆரணி திரு-குப்புச்சாமி முதலியாரவர்களும், தமிழ் மக்களாகிய நாம் நமது பண்டைக்காலத்திய நல்லொழுக்கங்களைப் பின்பற்றி யொழுகவேண்டுமென இடைவிடாது உழைத்து உழைத்து, உடலை வருத்தி, உயிரையும் விட்டார்கள். இத்தகைய பெரியார்களுக்குத் தமிழ்மக்கள் ஒவ்வொருவரும் என்ன கைம்மாறு செய்யக் கடமைப்பட்டிருக்கிறார்கள் என்பதை அவரவர்களே உணர்ந்துகொள்ள விட்டுவிடுகிறோம்.

மேலே குறித்த பெரியார்களிற் சிலருக்குப் பேருக்கத்தை யளித்தவர்கள் காந்தைத் தமிழ்ச்சங்கத்தாரே யாவர். இச்சங்கம் தோன்றியிராவிடில், நம் தமிழ் உலகை இததகைய நிலைமையிற் காணமுடியாது என்பதை நாம் உறுதியாய்க் கூறுகிறோம். ஆகவே, நம் தமிழ்த்தாய் மிக்க ஆவலோடு விரும்பி வேண்டுகிற, உரிமையான ஒப்புயர்வற்ற உயரிய ஆட்சியை விரைவில்பெறுதற்குப் பெருமுயற்சி செய்யவேண்டுமென உமாமகேசுவரனையே தலைமையாகக்கொண்ட கரந்தைத் தமிழ்ச் சங்கத்தை வேண்டுவதோடு, நமது நன்றியைச செலுத்திப் போற்றுவோமாக!

அறுசீர்க்கழி நெடி லடி ஆசிரிய விருத்தம்.

பூமணக்குந் தமிழ்மணக்குந் திருமணகருஞ் சுவைமணக்கும் பொற்பார் [செஞ்சொல்
நாமணக்குஞ் சீர்பாடி இப்புதிய குரோதனவாம் நல்ல ஆண்டைத்
தேமணக்கும் வளம்பலவும் மகிழ்பலவும் நமக்கருளித் திருவின் ஓங்க
மாமணக்குந் துதிமணக்கும் வாழ்த்துரைக்க மணத்தமிழீர் வம்மின்! [வம்மின்!!

கண்ணுதலார் ஆய்ந்ததிருத் தமிழ்நினைக்கக் கனிதமிழே கருதிக் கற்க
எண்ணுருவாந் தமிழ்கூற எழிற்றமிழின் நடைநடக்க இன்ப மான
நண்ணுதமிழ் வாழ்வினனி இருந்துகழி மகிழ்வெய்தி நலனே துய்க்கத்
தண்ணருளின் முழுமுதல்வன் தமிழ்சுவைத்தோன் செயவினிது [தமியேங் கட்கே.

கி. ஆ. பெ. விசுவநாத பிள்ளை,
"மணிவாசகத் தமிழகம்" திருச்சிராப்பள்ளி.

---

# சந்தாநேயர்களுக்கு அறிவிப்பு.

## 11-வது ஆண்டு.

நேயர்களே! அடுத்த ஆடிமீ நமது ஆனந்தபோதினிக்கு 11-வது வருடம் பிறக்கப்போகிறது. முன் வருடங்களில் நடத்தியபடியே அடுத்த ஆனிமீ சஞ்சிகையை வி-பி-யிலனுப்பி 11-வது வருட சந்தாவை வசூலிக்கத் தீர்மானித்திருக்கிறோம்.

முன்பணமனுப்புவோர் **1925**ளு ஜூன்மீ 15உக்குள் நமக்கு வந்து சேரும்படி யனுப்பக் கோருகிறோம். வி-பி-யில் சஞ்சிகை பெற்றுக் கொள்வதால் **3** அணு அதிகச் செலவும் வீண் ஆலசியமும் நேர்கிறதென்பது கவனிக்கத்தக்க விஷயம்.

அடுத்த வருடம் சஞ்சிகை வேண்டாதோர் 15-6-1925-க்குள் நமக்குத் தெரிவித்துவிட்டால் ஆனிமீ சஞ்சிகையை வி-பி-யிலனுப்பாமல் சாதாரணமாகவே யனுப்பிவிடுவோம். அப்படிச் செய்யாது பேசாமலிருந்து விட்டு, வி-பி வந்தபின் வாபீஸ் செய்து நமக்கு நஷ்டமுண்டாக்கிவிட்டு, "10-ம் வருட சந்தாவை நான் அனுப்பியிருக்க எனக்குக் கடைசிச் சஞ்சிகையை யனுப்பவில்லை" என்று குறை கூறுவதில் பயனில்லை. இதை நன்ருய்க் கவனிக்கக் கோருகிறோம்.

முன்பணமனுப்புவோரும் சஞ்சிகையை நிறுத்திவிட அறிவிப்போரும் மறவாமல் தங்கள் சந்தா நம்பரை யறிவிக்கவேண்டும். இதுகாறும் அதைக் குறித்துவைத்துக்கொள்ளாதவர்கள் வைகாசிமீ வரும் சஞ்சிகையின் மேல் உறையைக் கிழித்தெறியுமுன்பே விலாசத்தில் இருக்கும் சந்தா நம்பரை (1190 என்ற ரிஜிஸ்டர் நம்பர் அல்ல) மறவாமல் குறித்துக்கொண்டு அறிவிக்க வேண்டுகிறோம்.

## இன்னொரு விசேடம்:

சந்தா நேயர்களில் பலர் சஞ்சிகையை மாதம் இருமுறையாக்கவேண்டுமென்றும், அல்லது பக்கங்களையேனும் அதிகப்படுத்தவேண்டும் என்றும் அதற்காகத் தங்கள் சந்தாத் தொகையை யதிகப்படுத்தி யனுப்பச் சித்தமாயிருப்பதாகவும் வரைகிறார்கள்.

நம் நாட்டார்க்குப் பத்திரிகைகளில் இன்னும் போதுமான அபிமானம் உண்டாகவில்லையாதலின் மேற்கண்ட நண்பரைப்போல் எல்லாரும் நடந்துகொள்வார்களென்று எதிர்பார்க்கக் கூடவில்லை. நாடகம், பயாஸ்கோப் காட்சி முதலியவைகளுக்காக ஒரு வாரத்தில் செலவழிக்கும் பணத்தைச் சஞ்சிகைக்காக வருடமொருமுறை செலவழிக்கப் பின்னிடைகிறார்கள். இருக்கும் சந்தாதாரரில் அனேகர் வருடாரம்பத்தில் வி-பி-யை வாபீஸ் செய்துவிட்டுப் பின்னால் 1 ரூபாயனுப்பி மறுபடி சேர்கிறார்கள். இவ்வாறு ஆயிரம்பேர் வாபீஸ் செய்தாலும் சஞ்சிகை 1-க்கு 3 அணு வீதம் ரூபா 187-8-0 நமக்கு நஷ்டமாகிறது.

ஆதலின் சஞ்சிகையை யாதரிக்கும் சந்தா நேயர்கள் நமக்குச் சந்தாத் தொகையை உயர்த்தியளிக்காவிடினும் இத்தகைய வீண் நஷ்டத்தை யளிக்காமல், ஒவ்வொருவரும் முன்பணம் செலுத்திச் சஞ்சிகையைப் பெற்றுக்கொள்ளவும், ஒவ்வொருவர் ஒவ்வொரு புது சந்தாதாரரைச் சிபாரிசு செய்யவும் முயற்சியெடுத்துக்கொள்ளுமாறு வேண்டிக்கொள்கிறோம். இவ் விஷயத்தில் நமக்குச் சற்றேறக்குறைய திருப்தியுண்டாகுமாறு நேயர்கள் மனம் வைத்துச் செய்வார்களாயின், நாம் இந்தச் சந்தாவுக்கே சஞ்சிகையின் பக்கங்களை (11-ம் வருடத்திலிருந்தே) அதிகப்படுத்தச் சித்தமாயிருக்கிறோம். சந்தாதாரர்கள நமக்குக் கஷ்டத்தை யுண்டாக்காதிருந்தால் அதுவே நமக்குப் பரிசளித்தமாதிரியாகும்.

## முக்கிய அறிவிப்பு.

ஆனந்தபோதினி சுத்த திருக்கணித பஞ்சாங்கம் :—சந்தாத் தொகையை 1922ஞு ஜூன்மீ 14உக்குள் அனுப்பினவர்க்கு முன் விளம்பரப்படி உருத்ரோத்காரி வருஷத்திய பஞ்சாங்கம் இலவசமாக 7-4-1923க்குள் அனுப்பி அதன் விவரத்தை 8-வது வருஷம் 13-4-23-ல் வெளியான சஞ்சிகையில் பிரசுரித்திருக்கிறோம். ஆனால அதுபோலவே அடுத்த வருஷமும் செய்யப்படும் என்று பிரசுரிக்கவில்லை. அப்படியிருந்தும் கடந்த 9-ம் ஆண்

டில் இரக்தாக்ஷி வருஷத்திய பஞ்சாங்கமும் இலவசமாக அனுப்பியுள்ளோம். சந்தாதாரர்களை வேண்டி அப்படி அனுப்பிவந்தாலும் அதனால் நமக்கு அநேக தொந்தரவுகள் நேரிடுகிறபடியாலும் தபால் மூலியமாய் அனேக போக்குகள் நேரிடுவதினாலும் அவ்வழக்கத்தை நிறுத்திவிட்டோம். ஆதலின் இனி பஞ்சாங்கம் ஒருவருக்கும் இலவசமாகக் கொடுக்க முடியாததை சந்தா நேயர்கள் கவனிப்பார்களாக. பத்திராதிபர்.

---

## அப்பாலிகை அல்லது அதிசய மரணம்

(358-ம் பக்கத் தொடர்ச்சி.)

லாயரும் அவன் கூட்டாளிகளும் தன்னைக் கொல்ல யோசனை செய்ததைத் தானும் கூடவிருந்து யோசித்தால் தனக்கு எவ்வளவு தெரியுமோ அவ்வளவு லாயருடைய யோசனைகள் ஆனந்தலிங்குக்கு நன்றாய்த் தெரியும். அந்த லாயர், தான் லாயர் என்று பெயர் வைத்துக்கொண்டு ஊரில் ஏமாறுகிறவர்களைக் கொள்ளையடிக்கும் குணமுடையவர்களில் ஒருவனேயன்றி வேறில்லை. அவன் ஆபீஸ் இருக்கிற இடம் இரண்டாம்பேர்க்குத் தெரியாமல் தாராளமாய்க் கொலைநடத்தக்கூடியவிடம். அதைச் சூழ்ந்திருக்குமிடம் மிக்க கீழான ஜனங்கள் வசிக்கும் இடம். அங்கிருப்பவர்களில் கொலை செய்வதையே தொழிலாகவுடைய துஷ்டர்கள் அனேகம்பேர் ஆனந்தலிங்குக்குத் தெரியும். அப்படியிருந்தும் அவன் சற்றேனும் அஞ்சினவனல்ல. தான் செய்யவேண்டிய கடமையிருக்கும்போது தன் உயிருக்கு ஆபத்து நேரிடுமேயென்று அவன்சற்றும் அஞ்சுவதில்லை. ஆயினும் அஜாக்கிரதையோடாவது, ஆத்திரப்பட்டாவது, கண்மூடித்தனமாயாவது எதையும் செய்யமாட்டான். மிக்க முன்யோசனையோடு சர்வ ஜாக்கிரதையாகவே ஒன்றில் பிரவேசிப்பான்.

ஆனந்தலிங் லாயர்வீட்டை நோக்கிச் செல்லும்போது வழியில் மாலுமியைப்போல் உடையணிந்துகொண்டிருந்த ஒரு மனிதனைச் சந்தித்துச் சற்றுநேரம் குசுகுசுவென்று அவனிடம் பேசிக்கொண்டிருந்துவிட்டுச் சென்றான். பிறகு பத்து நிமிடங்களுக்குள் லாயர் வீட்டெதிரில் நின்றான்.

அவ்வீடு பாதைக்கப்புறம் சற்று தூரத்தில் இருந்தது. அதன் இருபுறங்களிலும் விசாலமான முற்றங்கள் இருந்தன. பக்கங்களில் கற்குவியல்கள் இருந்ததால் மத்தியிலுள்ள வீடு விசேஷமாய் மறைவுபட்டிருந்தது. எதிரில் ஒரு தொழிற்சாலையிருந்தது. அதில் இரவில் வேலை நடப்பதில்லையாதலால் மூடப்பட்டிருந்தது. இக்காரணங்களால் அந்த விடம் கொலை செய்வதற்குத் தகுதியான விடம்.

லாயர் போலீஸாரால் சந்தேகிக்கப்பட்ட ஆசாமியே. ஆகையால் கொஞ்சகாலமாய்ப் போலீஸார் அவன்மேல் கண்வைத்தே யிருக்கிறார்கள். அவ்வீட்டில் அநேகம் கொடிய துர்க்கிருத்தியங்கள் நடந்திருக்கின்றன. ஆனால் அந்த லாயர் மிக்க தந்திர சாமர்த்தியமுடைய பக்காப் பேர்வழியாதலால் இன்னும் எதிலும் அகப்படவில்லை. அப்படியும் ஒரு துப்பறிபவன் மிக்க சாமார்த்தியத்தோடும் கஷ்டத்தோடும் ஒரு குற்றத்திற்காக அவனைப்பிடித்துக் கைதுசெய்து விட்டான். அதில் லாயர் மிக்க தந்திரமாய்த் தப்பித்துக்கொண்டான். (தொடரும்.)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

---

### சந்தா நேயருக்கு ஓர் அறிக்கை.

நமது காரியாலயத்தில் சில காலமாக குமஸ்தாவாயிருந்தவரும் உள்ளூரில் ஆனந்தபோதினியின் சந்தாத் தொகையை வசூலித்து வந்தவருமாகிய மாரிமுத்து முதலியார் என்பவர் இம்மாதத்திலிருந்து நமது காரியாலயத்தினின்றும் நீங்கிவிட்டார். ஆதலின், சந்தாநேயர்கள், மேற்படியார் வசம் நமது காரியாலயத்திற்கு உரிய எவ்வித தொகையும் கொடுக்காமலிருக்கும்படி இதனால் தெரிவித்துக்கொள்கிறோம்.

### ஒரு பெரிய ஆகாயவிமானம்.

மணி ஒன்றுக்கு இருநூறுமைல் போகத்தக்கதும், பிரயாணிகளுக்கு எல்லாவித சௌகரியங்களும் பொதிந்துள்ளதுமாகிய ஒரு பெரிய ஆகாய விமானம் இங்கிலாந்து தேசத்தில் தயார்செய்யப்பட்டுவருகிறது. இவ்விமானம் பூர்த்தி பெற்றதும், தேசயாத்திரைகள் ஆகாய மார்க்கமாகச் செய்ய ஏதுவாயிருக்கும். இதன்மூலம் அமெரிக்காதேசத்தில் நியூயார்க் என்னும் பட்டணத்திலுள்ள ஓர் வியாபாரி ஒரு வாரத்தின்விடுமுறைத் தினத்தன்று தம்தேக களைப்பாறும் பொருட்டு இங்கிலாந்தின் பிரதேசத்தில் வந்து தங்கிஇருந்து மறுபடியும் திங்கட்கிழமைபோய்ச் சேரலாம். மேலும் அவர் லண்டன்மாநகரத்தில் பிற்பகல் சிற்றுண்டி செய்துவிட்டுக் காலைப் போஜனம் தம்ஜன்மதேசத்தில் போய் எடுத்துக்கொள்ளலாம். இவ்விமானம் பூர்த்தியானதும் அநேகருக்கு இது ஆச்சரியமாகவே தோன்றும். இதில் படுக்கையறைகளென்ன, குளிக்கும் அறைகளென்ன, போஜன அறைகளென்ன, டான்ஸ் (Dance) செய்ய விசாலமான கூடங்களென்ன, பிரயாணிகளின் சௌகர்யத்திற்காக அமைத்துள்ள வைத்தியசாலைகளென்ன இவைகளெல்லாம் பொருந்தியுள்ளன. இந்நூதன ஆகாயவிமான விஷயம் கேட்பார்க்கு நம்பமுடியாத சங்கதியாயும், பார்ப்போர்க்கு இதுஓர் ஆச்சரியம் பொருந்தியதாயும் இருக்கின்றது. இவ்விமானம் சாதாரணகாலங்களிலன்றி மற்றும்யுத்த காலங்களிலும் மிகவும் உபயோகமாயிருக்கும். இதில் ஒரேசமயத்தில் நூறு போர்வீரர்கள் தங்கள் போர் அணிகளுடன் பிரயாணம் செய்யலாம்.

### தண்ணீரின் ஆழத்தைக் கண்டுபிடிக்க ஓர் நூதனசட்டை.

ஜெர்மனி தேசத்தில் கையில் (Kiel) என்னும் இடத்தில் ஒருவர் தண்ணீரில் முழுகிச் சமுத்திரத்தின் ஆழத்தைக்கண்டுபிடிக்க ஒரு சட்டையைத் தயாரித்து அதனால் அவர் 525 அடி ஆழம் சமுத்திரத்தில் முழுகி இருக்கிறார். ஒரு அபாயமுமின்றிச் சமுத்திரத்தின் அடிப்பாகத்தில் நடந்து போகிறாராம். தமக்கு வேண்டிய அளவு பிராணவாயு தம்முடன் அவர் எடுத்துக்கொண்டு போனார். அவருக்கும் வெளியில் இருப்பவருக்கும் டெலிபோன் முகாந்திரமாகச் சமாசாரம் நடைபெறுகின்றது. இவர் ஆச்சரியப்படத்தக்க விதமாய் $4\frac{1}{2}$ நிமிஷத்திற்குள் இவ்வளவு ஆழத்திலிருந்தும் வெளிக்கிளம்புகிறாராம்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

## துரோதனஹு வைகாசிமூ—கலியுகாதி 5027 சாலிவாகனம் 1848, பசலி 1334-35—கொல்லமாண்டு 1100-1101—ஹிஜரி 1343-44, இங்கிலீஷ் 1925ஹு மேமூ—ஜூன்மூ

| வைகாசி | மே | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | வியா | சப்46-3 | திரு40-0 | சித்60 | விஷ்ணுபதி புண்யகாலம் |
| 2 | 15 | வெ | அ41-45 | அவி37-50 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 3 | 16 | சனி | நவ 38-25 | சதை35-50 | அ35-50ம | பிரயாணம் விலக்க |
| 4 | 17 | ஞா | தச35-58 | பூரட்35-18 | சி35-18அ | மாடுவாங்க |
| 5 | 18 | திங் | ஏ34-33 | உத்35-40 | சித்60 | சர்வ மத்வ ஏகாதசி |
| 6 | 19 | செ | துவா34-8 | ரேவ37-0 | சித்60 | |
| 7 | 20 | புத | திர34-38 | அசு39-20 | ம39-20சி | கரிநாள்,மாச சிவராத்திரி |
| 8 | 21 | வியா | சது36-13 | பரணி42-35 | சி42-35ம | மிதுனாயனம் 35-43 |
| 9 | 22 | வெ | ●38 50 | கிரு·※·46-55 | சி46-55ம | சர்வத்திர அமாவாசை கிருத்திகை |
| 10 | 23 | சனி | பிர42-43 | ரோ52-25 | அ52-25சி | ஜேஷ்ட சுத்தம் |
| 11 | 24 | ஞா | துதி47-8 | மிரு58-55 | சித்60 | சந்திர தெரிசனம் 4-ம் பிறைபோல் தோற்றும் |
| 12 | 25 | திங் | திரி53-15 | திரு60 | சித்60 | ஸ்வர்ண கௌரி விரதம் |
| 13 | 26 | செவ் | சது59-43 | திரு6-13 | மர6-13சி | மாசசதுர்த்தி விரதம் |
| 14 | 27 | புத | பஞ்60 | புன14-0 | சித்60 | கத்திரிமுடிவு |
| 15 | 28 | வியா | பஞ்6-10 | பூசம்21-55 | அ21-55சி | சஷ்டி, ஆரண்ய கௌரி |
| 16 | 29 | வெ | சஷ்12-15 | ஆயி29-15 | மர60 | கரிநாள் [விரதம் |
| 17 | 30 | சனி | சப்17-23 | மகம்35-30 | அ35-30சி | கரிநாள் |
| 18 | 31 | ஞா | அ20-40 | பூரம்40-13 | சி40-13அ | வியாதியஸ்தர் குளிக்க |
| 19 | ஜூன் 1 | திங் | நவ22-53 | உத்43-0 | சித்60 | பிரயாணம் விலக்க |
| 20 | 2 | செவ் | தச22-30 | அஸ்43-25 | சித்60 | தசஹார விரதம் |
| 21 | 3 | புத | ஏகா20-0 | சித்42-25 | சித்60 | சர்வ மத்வ ஏகாதசி |
| 22 | 4 | வியா | து15-30 | சுவா39-8 | அ39-8சித் | பிரதோஷம் |
| 23 | 5 | வெ | திர9-28 | விசா34-30 | சித்60 | மாடு, தானியம் வாங்க |
| 24 | 6 | சனி | சது2-0 ○53-53 | அனு28-38 | சித்60 | |
| 25 | 7 | ஞா | பிர45-5 | கேட்22-0 | மர22-0அ | |
| 26 | 8 | திங் | துதி36-13 | மூல15-13 | சி15-13ம | |
| 27 | 9 | செவ் | திரி27-38 | பூரா8-38 | சித்8-38அ | |
| 28 | 10 | புத | சது19-53 | உத்2-30 திரு56-55 | சி56-55பி | |
| 29 | 11 | வியா | பஞ்13-5 | அவி53-18 | சி53-18ம | |
| 30 | 12 | வெ | சஷ்7-20 | சதை50-30 | சித்60 | |
| 31 | 13 | சனி | சப்3-0 | பூரட்49-10 | ம49-10சி | |

| | | | |
|---|---|---|---|
| | புத | சூரி சுக் | செ |
| | 20-ரிஷ-புத<br>21-மிது-சுக் | | ராகு |
| கே | | | |
| குரு | | சனி | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS,